

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 14 கலசம் 158 செப்டம்பர் 2019 ரூ. 25
Volume 14 Issue 158 September 2019 Rs.25
நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social Criticism

## பிங்க்
## நேர்கொண்ட பார்வை
ஒவ்வொரு ஆணும் பார்க்க வேண்டிய படம்!

உமா ஷக்தி
ஆனந்த்
ஜான் சுந்தர்
டிசே தமிழன்
ராம் முரளி
டி. கண்ணன்
சி. புஷ்பராணி
பாவண்ணன்
ட்டி.ஆர். நடராஜன்
ஸிந்துஜா
அ. முத்துலிங்கம்
பூமா ஈஸ்வரமூர்த்தி

சிற்றெறும்பின் கால் தடம்
**மாலதி மைத்ரி**
புதிய பத்தி





Life is Beautiful இயக்குநர்
**ராபர்த்தோ பெனிகினி**
நேர்காணல்

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




Rs. 140




Rs. 130




Rs. 170




Rs. 110




Rs. 200




Rs. 100




Rs. 80




Rs. 90




Rs. 90

**அம்ருதா**

#1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 மூன்றாவது முக்கிய சாலை 2ஆம் விரிவாக்கம்,
சி. ஐ. டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035
தொலைபேசி: 73387 57878, 94440 70000,
**மின்னஞ்சல்:** info.amrudha@gmail. com, **இணையதளம்:** www. amruthamagazine. com

கேள்வி 14 கலசம் 158



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

செப்டம்பர்-2019 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**

ஆலோசனைக் குழு
ஓவியம்: **சந்ரு**
மனநலம்: **டாக்டர் மா. திருநாவுக்கரசு**
வரலாறு: **பொ. வேல்சாமி**
மொழிபெயர்ப்பு: **நாகரத்தினம் கிருஷ்ணா**
திரைப்படம்: **விட்டல்ராவ்**
கல்வி: **பேரா. தியாகராஜன்**
அறிவியல்: **பத்ரி சேஷாத்ரி**
இலக்கியம்: **தேவேந்திரபூபதி**
நாடகம்: **அ. ராமசாமி**
ஊடகம்: **இளைய அப்துல்லாஹ்**
சூழலியல்: **மோகன்ராம்**
இசை: **ரவி சுப்பிரமணியம்**
விளையாட்டு: **ஆர். அபிலாஷ்**
தற்கால நிகழ்வுகள்: **செ. சண்முகசுந்தரம்**
அரசியல்: **மருதன்**

வடிவமைப்பு: **பிரபாகரன்**

**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்

# இயற்கையை அறிவோம்!

பிரபு திலக்

தமிழகத்தில் நீலகிரி, கேரளா, மும்பை, கர்நாடகா, மகாராஷ்டிரா, ஒடிசா, அஸ்ஸாம் என இந்தியாவின் பல பகுதிகளில் இந்த ஆண்டும் பருவமழை கடுமையான பாதிப்புகளை ஏற்படுத்தியுள்ளது.

தமிழ்நாட்டின் வரலாற்றிலேயே ஒரே நாளில் பெய்த அதிகபட்ச மழையாக, ஆகஸ்ட் 8ஆம் தேதி, நீலகிரி மாவட்டம் அவலாஞ்சியில் 820 மி.மீ. மழை கொட்டியது. இதற்கு முன்னர் 1943இல் கடலூரில் ஒரே நாளில் பெய்த 570 மி.மீ. மழையே அதிகபட்சமாக இருந்தது. அதன்பின்னர் ஆகஸ்ட் மாதம் 9ஆம் தேதி முதல் 12ஆம் தேதி வரை நான்கு நாட்களில் மட்டும் அவலாஞ்சியில் 258 செ.மீ., மழை பெய்து பெரிய அளவில் நிலச்சரிவை ஏற்படுத்தியது. அவலாஞ்சியில் ஏற்பட்ட நிலச்சரிவில் ஒரு கிராமம் முழுமையாகப் பாதிக்கப்பட்டது. ஆனால், இந்தப் பகுதியில் அதிகளவில் மரங்கள் இருந்ததால், பேரழிவை ஏற்படுத்தாமல், மழையை தாக்குப் பிடிக்க முடிந்தது. இதே மழை ஊட்டி அல்லது குன்னூர் போன்ற பகுதிகளில் பெய்து இருந்தால், பெரிய பேரழிவை மக்கள் சந்தித்து இருப்பார்கள் என்கிறார்கள் சூழியலாளர்கள். ஆனாலும், ஊட்டி நகரத்தில் பல பகுதிகள், குறிப்பாகக் கூடலூர், மஞ்சூர், எமரால்ட் அணை செல்லும் சாலைகள் பெரும் மழையினால் சரிந்த மரங்களாலும் முழுவதுமாக முடங்கியது.

கேரளத்தில் கடந்த வருட பேய் மழையும் நிலச்சரிவுகளும் இன்னும் நம் நினைவுகளை நீங்கா நிலையில் இவ்வருடமும் கேரளா பருவமழையினால் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளது. கேரளாவின் வடக்கு மாவட்டங்கள், குறிப்பாக கோழிக்கோடு, வயநாடு, மலப்புரம் போன்றவை மிக மோசமாகப் பாதிக்கப்பட்டுள்ளன. 100க்கும் மேற்பட்டவர்கள் பலியாகி இருக்கின்றனர். கிட்டதட்ட இரண்டு லட்சம் பேர் வெள்ள பாதிப்பு பகுதிகளில் இருந்து வேறு இடங்களுக்கு இடம் பெயர்ந்துள்ளனர்.

கர்நாடகாவில் கடந்த ஆண்டு கடுமையான மழையால் அழிவை சந்தித்த பகுதிள் எல்லாம் இந்த ஆண்டும் பாதிப்புக்கு உள்ளாகியுள்ளது. கர்நாடகாவில் பலஇடங்களில் முகாம்கள் அமைக்கப்பட்டு, மக்களுக்கு அரசு சார்பில் உணவு வழங்கப்பட்டது.

மகாராஷ்டிரா மாநிலத்தின் மேற்கு மாவட்டங்களில் சென்ற மாதம் பல நாட்களாக விடாமல் மழை கொட்டியதால் 2 லட்சம் பேர் வெளியேற்றப்பட்டனர். மத்தியப் பிரதேச மாநிலத்திலும் பெரும்பாலான மாவட்டங்கள் கனமழையினால் கடுமையாகப் பாதிக்கப்பட்டு பெரும்பாலான மக்கள் தங்கள் வீட்டைவிட்டு வெளியேறிப் பாதுகாப்பான இடங்களில் தஞ்சம் புகும் நிலை ஏற்பட்டது.

ஏன் இப்படி, வருடம் முழுவதும் பெய்ய வேண்டிய மழை, ஒரே சில நாட்களில் தொடர்ந்து கொட்டி வெள்ளப் பெருக்கை உருவாக்குகிறது?

சூழியல் விஞ்ஞானிகள் அனைவரும் புவி வெப்பமயமாதலையே காரணமாக சொல்கின்றனர். காந்திநகர் ஐஐடி மேற்கொண்ட ஆய்வில், "இந்த நூற்றாண்டில் பூமியின் வெப்பம் 2.6 முதல் 8.5 டிகிரி செல்சியஸ் வரை அதிகரிக்கும். குறிப்பாக இந்தியாவில் தென்னிந்திய மாநிலங்களில் வெப்பம் அதிகரிக்கும். இதனால் தென்னிந்தியா கடுமையான சீதோஷண மாற்றத்திற்கு உள்ளாகும். அதிகளவில் மழை, வெப்பம் என்று சீதோஷண மாற்றங்கள் ஏற்படும். தென்னிந்திய மாநிலங்கள் வெள்ளத்தில் மூழ்கும் அபாயம் ஏற்பட்டு, மாநில எல்லைகள் மாறும் சூழல்கூட ஏற்படலாம். இவற்றை தடுக்க வேண்டும் என்றால், முதலில் கார்பன்டை ஆக்சைடு வெளியாவதை குறைத்து, இயற்கையை பாதுகாக்க வேண்டும்" என்று தெரிவித்துள்ளனர்.

புனேவைச் சேர்ந்த இந்திய நிறுவனத்தின் வெப்ப மண்டல அறிவியல் அறிஞர் ரோக்சி மாத்யூவும், ''சீதோஷண மாற்றம் காரணமாக வெள்ளம் அதிகரிக்கவே செய்யும்'' என்று தெரிவித்துள்ளார்.

இந்த சீதோஷண நிலை மாற்றம் காரணமாக கேரளா, கர்நாடகா மாநிலங்களின் சில இடங்களில் மட்டும் அதிக மழை பெய்யும் அதே நேரத்தில் மற்ற இடங்களில் வறட்சி ஏற்படுகிறது. இங்கெல்லாம் கடந்த பல ஆண்டுகளில் குறைவான பருவ மழையே பெய்துள்ளது. புவி வெப்ப மயமாதல் காரணமாக இப்போதெல்லாம் இயற்கை சீற்றங்கள் பெரும்பாலும் நம்மால் கணிக்க முடியாதவையாக இருக்கின்றன. வானிலை ஆராய்ச்சி ஆய்வு மையங்கள் கணித்துக் கூறினாலும் பல நேரங்களில் அந்த கணிப்பு மாறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

புவியியல், சுற்றுச்சூழல் மேலாண்மை மையத்தின் வானியல் ஆராய்ச்சியாளரும் கேரளாவைச் சேர்ந்தவருமான வேணுஜீ, "1960கள் தொட்டே பருவமழை மாற்றம் அடையத் தொடங்கிவிட்டன. அதன் உச்சத்தை நாங்கள் 2018இல் அடைந்தோம். இதற்கு பசிபிக் பெருங்கடலில் நிகழ்ந்துள்ள மாற்றங்கள் முக்கியக் காரணம். இந்தியப் பெருங்கடலுக்கு வெப்பத்தைக் கடத்தும் போது, பசிபிக் பெருங்கடலின் மேற்பரப்பின் வெப்பநிலை வெகுவாக குறைகிறது. இதன் விளைவாக இந்தியாவின் தென்மேற்கு பருவமழையின் முறையில் மாற்றம் ஏற்படுகிறது.

இந்தியப் பெருங்கடலில் ஏற்பட்டுள்ள மாற்றம்



பழைய நிலைக்கு திரும்புமா என்று கேட்டால், அது நடக்காது என்பதுதான் என் கருத்து. 1970களில் இருந்தே உலகளவில் கடலில் மாற்றம் ஏற்பட்டு வருகின்றது. இதை நாம் ஒன்றும் செய்ய முடியாது. கடல் வெப்பமாவதை அடுத்து, வெப்பமண்டல நாடுகள் அனைத்தும் வெள்ளத்தால் தங்கள் பகுதிகளைக் கொஞ்சம் கொஞ்சமாக இழக்கும் என 'காலநிலை மாற்றம் குறித்த அரசுகளுக்கிடையிலான குழு' அளித்துள்ள அறிக்கை கூறுகிறது.

உலக வெப்ப மயமாதல் வெப்பமண்டல பகுதிகளையே மோசமாகப் பாதிக்கிறது. இதனால், பருவமழைக் காலங்களில் இனி அதிகமான மழையே பெய்யும். இப்போது நமக்கிருக்கும் ஒரே வழி, உலகளவில் கார்பன் வெளியேற்றத்தைக் குறைப்பதுதான்" என்கிறார் வேணு ஜீ.

வெள்ளம் உருவாவதால் ஏற்படும் பாதிப்பு ஒரு பக்கம் என்றால், இன்னொரு பக்கம் மலைப் பிரதேசங்களில் வாழ்பவர்கள் நிலச்சரிவுகளால் கடுமையாக பாதிக்கப்படுகின்றனர். கேரளாவில் இந்த ஆண்டு 83 இடங்களில் நிலச்சரிவு ஏற்பட்டுள்ளது. ஆகஸ்ட் 7 மாலை ஏற்பட்ட நிலச்சரிவில் வயநாடு மாவட்டத்தில் உள்ள பழங்குடி மக்கள் வசிக்கும் மேப்படி என்ற ஒரு கிராமமே புதையுண்டு போய்விட்டது.

இந்த நிலச்சரிவுகள் மேற்குத் தொடர்ச்சி மலைகளில் நிகழும் சுற்றுச்சூழல் சீர்கேடுகளாலேயே உருவாகியிருக்கிறது என்று ஆய்வு முடிவுகள் தெரிவிக்கின்றன. கேரளாவின் வனவியல் ஆராய்ச்சி மையத்தின் தலைமை விஞ்ஞானி டி.வி.சஞ்சீவ், மழை பாதிப்புக்குள்ளான பகுதிகளில் சேதங்களைப் பற்றி ஆராய்ந்து, எங்கெல்லாம் நிலச்சரிவுகள் நிகழ்ந்ததோ அங்கெல்லாம் அம்மலையின் மறுபக்கம் கிரானைட் குவாரிகள் அமைந்துள்ளது என்று தன் அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

மாதவ் கட்கில் என்பவர் தலைமையில் மேற்குத் தொடர்ச்சி மலைகளின் இயற்கை வளங்களைப் பாதுகாக்க அமைக்கப்பட்ட குழு, கடந்த 2011ஆம் ஆண்டு தன் அறிக்கையைத் தாக்கல் செய்தது. அதில் மேற்குத் தொடர்ச்சி மலை தொடர்களில் இயங்கி வரும் 91 குவாரிகள் சட்டரீதியாக இயங்கினாலும், அவை சுற்றுச்சூழல் ரீதியாக முக்கியமான இடங்களில் இயங்குபவை என்றும், அதனால் நிலச்சரிவுகள் ஏற்படும் வாய்ப்புகள் அதிகம். அவை அனைத்தும் உடனடியாக மூடப்பட வேண்டும் என்று கூறியிருந்தது குறிப்பிடத்தக்கது. மாதவ் கட்கில்அறிக்கையில் நிலச்சரிவுகள் நிகழக்கூடிய பகுதி என்று குறிப்பிடப்பட்டிருந்த 11 இடங்களில் தற்போது 10 இடங்களில் நிலச்சரிவு ஏற்பட்டுள்ளது.

சஞ்சீவ் ஆராய்ச்சிப்படி கேரளத்தில் ஒரு பஞ்சாயத்திற்கு ஆறு குவாரிகள் வீதம் மொத்தம் 5,924 குவாரிகள் மாநிலம் முழுவதும் படர்ந்துள்ளன. இதில் 3,332 குவாரிகள் சுற்றுச்சூழல் ரீதியாக மிக முக்கியமான இடங்களில் அமைந்துள்ளதாக கட்கில் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது ஏறத்தாழ 56 சதவிகித குவாரிகள் நிலச்சரிவு ஏற்படும் பகுதிகளில் அமைந்துள்ளன.

மலப்புரம் மாவட்டத்தில் காவளப்புரா என்னும் பகுதியில், ஒரு குவாரி இருக்க வேண்டிய இடத்தில் ஐந்து குவாரிகள் உள்ளன. மொத்தம் ஐந்து கி.மீ. பரப்பளவில் 27 குவாரிகள் என மிகவும் குறுகிய பகுதியில் அமைக்கப்பட்டுள்ளன. இப்போது அங்குதான் கேரளத்தின் மிகப்பெரிய நிலச்சரிவு நிகழ்ந்துள்ளது.

வயநாட்டின் மெப்பாடியில் 100 ஏக்கர் பரப்பளவு தேநீர் தோட்டம் நிலச்சரிவால் மொத்தமாக அழிந்துள்ளது. இம்மலைக்குப் பின்புறம் ஒரு குவாரி பயன்பாட்டிலிருந்தது குறிப்பிடத்தக்கது. குவாரிகளில் வெடி வெடிக்கும்போது ஏற்படும் அதிர்வுகளால் மலைக் குன்றுகள் பலவீனம் அடைகின்றன.

மலைப் பகுதிகளில் அனுமதிக்கப்பட்ட கட்டுமானப் பணிகளால் நீர் வழித்தடங்கள் தடுக்கப்பட்டு ஆறுகள் பாதை மாறியுள்ளது. இதுவும் நிலச்சரிவுகளுக்குக் காரணமாகியுள்ளது.

இவையெல்லாம் நமக்கு தெரிவிப்பது, நாம் இதிலிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் என்பது ஒன்றுதான். அது, இயற்கையை அழிப்பதை நாம் உடனடியாக நிறுத்திக்கொள்ள வேண்டும்; இல்லையென்றால், இயற்கை நம்மை அழிப்பதை தடுக்க முடியாது! ●

### பிங்க் / நேர்கொண்ட பார்வை

# ஒவ்வொரு ஆணும் பார்க்க வேண்டிய படம்!

உமா ஷக்தி

மூன்று பெண்கள் - மினால் (தாப்ஸி பன்னு), ஃபாலக் (கீர்த்தி குல்ஹரி), ஆண்டிரியா (ஆண்டிரியா தரியங்); இந்த மூவரும் தில்லியில் வாழும் இளம் பெண்கள். பணபலம் மிக்க, அரசியல்ரீதியாகவும் சக்தி வாய்ந்த ஆண்களால் கொலை வழக்கு ஒன்றில் குற்றம் சாட்டப்படுகின்றனர். ஆனால் உண்மையில், ராஜ்வீர் என்ற பெரும் பணக்காரனின் ஆசைக்கு இணங்க மறுத்து, அவனை கையில் அகப்பட்ட பாட்டிலால் தீவிரமாகத் தாக்கிவிட்டு தப்பியிருக்கிறாள் மினால். இதுதான் அவள் செய்த குற்றம். இப்படத்தின் பதைபதைக்க வைக்கும் தொடக்கக் காட்சியில், அவர்கள் தப்பிய பின் வீட்டுக்கு வந்து சேர்ந்து, இனி இதைப் பற்றி மறந்துவிடலாம் என்று முடிவெடுக்கிறார்கள். ஆனால் தாக்கப்பட்டவன், ஆணாக இருப்பவன், அவனுக்குள் ஏற்கனவே இருந்த மிருகம் மேலும் பன்மடங்கு தூண்டப்பட பழிவாங்கத் துடிக்கிறான். மினால் இதை எப்படி எதிர்கொண்டாள், அவளுக்கு அதற்கு பின் என்ன நேர்ந்தது என்பதை விரிவாகச் சொல்வதுதான் ‘பிங்க்’ படத்தின் மையக் கதை.



பெண்களின் மீது காலகாலமாக நடந்தேறும் பாலியல் துன்புறுத்தல்களும் வன்முறைகளும் முடிவற்று தொடர்ந்து கொண்டிருக்கும் சூழலில், பெண்கள் தங்களின் ஆதாரமான உரிமைகளையும் சுயமரியாதையையும் வலியுறுத்தும் படமாக ‘பிங்க்’ இருந்தது. 2016ஆம் ஆண்டு அனிருத்தா ராய் சௌத்ரியின் இயக்கத்தில் வெளியான இந்தத் திரைப்படம், இறுக்கமான ஒரு சமூகத்தில் ஆண் - பெண் இருவரும் பாரபட்சமான கண்ணோட்டத்தில் எப்படி பார்க்கப்படுகிறார்கள் என்பதை உரக்கச் சொன்னது. அதுவும் அந்த ஆண் ஆதிக்கம் மிக்கவனாக இருந்துவிட்டால், அவனது நியாய தர்மங்கள் முற்றிலும் வேறுபடும் என்பதையும் கூறியது.

ஒரு பெண் பாலியல் உறவுக்கு விருப்பம் தெரிவிக்காவிட்டால் அவளை வற்புறுத்துவது குற்றம்தான் என்ற நுணுக்கமான விஷயத்தை முதன்முறையாக வெளிச்சம் போட்டுக் காட்டியது இந்தப் படம்.

மினல், ஃபாலக், ஆண்ட்ரியா மூவரும் மத்திய வர்க்கத்தைச் சேர்ந்த வேலைக்குச் செல்லும் பெண்கள். அவர்கள் ஒரு நாள் பொழுதுபோக்காக இரவு வெளியே செல்ல முடிவெடுக்கின்றனர். ஒரு இசை நிகழ்ச்சிக்குப் பின், தனது நண்பனின் நண்பனான ராஜ்வீர் என்பவனின் அழைப்பை ஏற்று, அவர்கள் மூவரும் சூரஜ்கந்த் எனும் இடத்திலுள்ள ரிசார்டுக்குச் செல்ல முடிவெடுக்கின்றனர். ஆனால், இரண்டு கோப்பை மதுவை அருந்திய பின் அவர்கள் எதிர்பாராத வகையில் பிரச்சினைகளுக்குள் அவர்க்ள் சிக்க நேர்கிறது.

ஒருபுறம் ஆண்டிரியாவை ராஜ்வீரின் நண்பன் தவறாக அணுக, இன்னொரு அறையில் மினாலை ராஜ்வீர் பாலியல் துன்புறுத்தலுக்கு உள்ளாக்க முற்படுகிறான். மினால் தீர்மானமாக மறுத்தும், அவளை பலவந்தம் செய்யவே, வேறுவழியின்றி மினால் கையில் அகப்பட்ட ஒரு பாட்டிலால் அவனைத் தாக்க, அது அவன் தலை, கண்களில் ஆழமான காயத்தை ஏற்படுத்திவிடுகிறது. ராஜ்வீர் ரத்தம் வடிய அதிர்ச்சியில் உறைந்து நிற்கையில்தான், மினால் தன் தோழிகளுடன் அங்கிருந்து தப்பிச் செல்கிறாள். அந்த இரவோடு இந்தப் பிரச்சினை முடிந்துவிடும் என்று நம்புகின்றனர்.

ஆனால், அவர்கள் வாழ்க்கை அதன்பின் ஒட்டுமொத்தமாக மாறவிருப்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. தோற்றுவிட்டோம், அதுவும் பெண்ணின் கையால் அடிபட்டுவிட்டோம் என்ற ஆக்ரோஷ மனநிலைக்குத் தள்ளப்படுகிறான் ராஜ்வீர். தன்னுடைய பணபலத்தைப் பயன்படுத்தி அப்பெண்களுக்கு எதிராக ஒரு பொய் வழக்கினை தொடுத்து, மினாலை பிரதான குற்றவாளியாக சித்தரிக்கிறான். பணத் தேவைக்காக இந்த மூவரும் அடிக்கடி பாலியல் தொழில் செய்வதாகவும், சம்பவம் நடந்த அன்று தன்னிடம் பணம் கேட்டு வற்புறுத்தி, தான் தர மறுத்ததால் தன்னை கடுமையாகத் தாக்கிவிட்டதாகவும், கொலை முயற்சி புகார் அளித்து எஃப்.ஐ.ஆர். பதிவு செய்கிறான்.

இது ஒரு புறம் இருக்க, மினாலை எதிர் வீட்டிலிருந்தபடி கவனிக்கிறார் முன்னாள் வழக்கறிஞரான தீபக் சேகல் (அமிதாப் பச்சன்). அவருக்கு பை போலார் பிரச்சினை உள்ளிட்ட சில மனநலப் பிரச்சினைகள் உண்டு. தன் மனைவி (வித்யா பாலன்) மறைவுக்குப் பின் வழக்கறிஞர் தொழிலை கைவிட்டுவிட்டவர், மினாலின் பரிதாப நிலையைப் பார்த்து தானே முன்வந்து அவர்களுக்கு உதவுகிறார். படம் இங்கிருந்து ஒரு திருப்பத்தை சந்திக்கிறது.

நீதிமன்ற காட்சிகளில் மினாலிடம் தீபக் கேட்கும் கேள்விகள் மிகவும் முக்கியமானவை.



நீங்கள் கன்னித்தன்மையுடன் இருப்பவரா என்பதில் தொடங்கி, அவருக்கு மது அருந்தும் பழக்கம் உள்ளது என்பது வரை, பல உண்மைகளை அவர் வாயிலிருந்தே வரவழைக்கிறார் தீபக்.

'பிங்க்' இந்த இடத்தில் இந்த சமூகத்தின் முன் சில கேள்விகளை முன் வைக்கிறது. ஆண்களுடன் சேர்ந்து மது அருந்தும் பெண்களை கீழ்த்தரமாக நினைப்பவர்கள்தான் பெரும்பாலானவர்கள். மேலும், குட்டைப் பாவடை அணிந்த பெண்களை, ஆண் - பெண் பாகுபாடின்றி அனைவரிடமும் சிரித்துப் பேசும் பெண்களை, எதார்த்தமாக ஆணைத் தொட்டுப் பேசும் பெண்களை, ஒரு ஆண் தப்பாக கருதும் விதத்தில்தான் இந்தச் சமூகம் இப்போதும் உள்ளது. 'பிங்க்' திரைப்படம் அத்தகையவர்களை மட்டுமல்லாமல், ஒட்டுமொத்த ஆண்களின் மனசாட்சியையும் உலுக்கிப் பார்க்கிறது.

ஒரு பெண் உறவில் தனக்கு விருப்பமில்லை, அதாவது 'நோ' என்று சொல்லிவிட்டால், அது அவளைப் பொறுத்தவரை இறுதிவரை 'நோ' என்பது மட்டும்தான். அவளை அதற்கு மேல் வற்புறுத்தும் உரிமை ஆணுக்குக் கிடையாது. காதலன், கணவன் அல்லது பணத்துக்காக வருபவன் என யாராக இருந்தாலும், அந்தப் பெண் தன் விருப்பமின்மையைத் தெரிவித்துவிட்டபின், அவன் விலகிச் செல்வதுதான் சரி. அதுதான் நியாயம் என்பதை 'பிங்க்' திரைப்படம் மூலம் வலியுறுத்திச் சொல்லியிருந்தார்கள்.

கொல்கத்தாவில் நடந்த ஒரு உண்மை சம்பவத்தை மையமாக வைத்தே 'பிங்க்' கதை பின்னப்பட்டுள்ளது. சூஸட் ஜோர்டன் என்ற ஆங்கிலோ இந்தியப் பெண்ணுக்கு பிப்ரவரி 2012ஆம் ஆண்டு நேர்ந்த கொடூரச் சம்பவத்தையும், இதுபோன்ற சம்பவங்களில் நேரடியாகவும் மறைமுகமாகவும் பாதிக்கப்பட்ட பெண்களிடம் சேகரித்த தகவல்களின் அடிப்படையிலும் எடுக்கப்பட்ட படம்தான் 'பிங்க்' என்பதை இயக்குநர் அனிருத்தா தெரிவித்துள்ளார்.

சூஸட் இரண்டு குழந்தைகளுக்குத் தாய். வாழ்க்கையை அதன் போக்கில் வாழ வேண்டும் என்ற கொள்கையுடைய அவர், சற்று உல்லாசப் பிரியர். தன் மனதுக்கு பிடித்தபடி தன்னுடைய சொந்த வாழ்க்கையை அமைத்துக் கொண்டவர். மது அருந்தும் பழக்கமுடையவர். ஒரு நாள் பியர் அருந்த பப்புக்குச் சென்றுள்ளார். அங்கு சந்தித்த சிலருடன் நட்பாகிவிடவே அவர்களிடம் சிறிது நேரம் பேசுகிறார். அவர்களில் ஒருவர் இவருக்கு விலை உயர்ந்த மதுவகையை அறிமுகப்படுத்த, அதை ஏற்கிறார். மறுபடியும் இன்னொரு கோப்பை மதுவை சூஸட்டுக்கு தருகிறார்கள்.

ஒரு கட்டத்தில் போதை அதிகமாகிவிடவே கிளம்ப வேண்டும் என்று சூஸட் சொல்ல, அவர்கள் ஐவரும் சேர்ந்து இன்னும் சிறிது நேரம் அங்கிருக்கும்படி கூறுகின்றனர். ஆனால், தன் நிலைமை சரியில்லை என்பதை உணர்ந்த சூஸட், உடனடியாக அங்கிருந்து கிளம்ப எத்தனிக்கிறார். நள்ளிரவாகிவிட்ட நிலையில், துரதிருஷ்டவசமாக வீடு திரும்ப வாகனங்கள் எதுவுமில்லை. சூஸட்டைப் பின்தொடர்ந்து வந்த அவர்கள், தாங்கள் அவரது இடத்தில் கொண்டுபோய் விடுவதாக சொல்லி, தங்கள் ஏறச் சொன்னதும், வேறு


பிங்க்

வழியின்றி அந்தக் காரில் சூஸட் ஏறுகிறார்.

அதன்பின்னர், அந்த ஐவரும் சூஸட்டை பாலியில் வன்கொடுமைக்கு உள்ளாக்குகிறார்கள். உயிர் மட்டுமே எஞ்சியிருக்க, உடலும் மனமும் நொந்து வீடு வந்து சேர்கிறார் சூஸட். அவரது பெண் குழந்தைகளுக்கு தாயின் நிலை புரியவில்லை; என்றாலும் பார்க்கக் கூடாத கோலத்தில் பெற்ற தாயை பார்த்த அதிர்ச்சி யிலிருந்து அவர்கள் மீளவில்லை.

அதன்பின் சிகிச்சை எடுத்து ஓரளவு உடல்நலம் தேறியபின் தனக்கு நேர்ந்த பாலியல் துன்புறுத்தலை பற்றி காவல் நிலையத்தில் புகார் அளிக்கிறார் சூஸட். மேலும், பாலியல் வன்கொடுமைக்கு எதிராகவும் பெண்கள் பாதுகாப்பிற்காகவும் குரல் கொடுக்கும் சமூக ஆர்வலராக மாறுகிறார். தனக்கு நேர்ந்த கொடூரம் இன்னொரு பெண்ணுக்கு நேரக் கூடாது என்பதுதான் அவரது நோக்கமாக இருந்தது.

ஆனால், காவல் நிலையத்திலும் சரி, சமூகத்திலும் சரி, அவருக்கு நியாயம் கிடைக்கவில்லை. யாரிடம் இந்தப் பிரச்சினையை கூறினாலும், நீ ஒழுங்காக இருந்திருந்தால் ஏன் இவ்வளவு பிரச்சினைகள் ஏற்படுகிறது என்று திருப்பி கேட்டார்களே தவிர, சூஸட்டை அந்நிலைக்கு உள்ளாக்கியவர்களை குறை சொல்லவில்லை.

காவல் நிலையத்தில் சூஸட் புகாரை எடுத்துக்கொள்ளாததன் காரணம், சூஸட்டை இந்நிலைக்கு ஆளாக்கிய காதர் கான் என்பவர் நடிகையும் அரசியல் பிரமுகருமான நுஸ்ரத் ஜகானின் ஆண் நண்பர். காதர், தன் நண்பர்களையும் தன்னையும் காப்பாற்றிக்கொள்ள நுஸ்ரத்தின் உதவியை நாடி யிருக்கிறார்கள். மேற்கு வங்க முதலமைச்சர் மம்தா பானர்ஜியும், சூஸட்டை நல்லொழுக்கம் அற்ற பெண், தன் கட்சிக்கு எதிராக அவதூறு எழுப்புகிறார், பணத்துக்காக பாலியல் தொழில் செய்பவர் என்றெல்லாம் சாடினார்.

நீதிமன்ற அலைச்சல்கள், நியாயம் கிடைக்காத சோர்வு என சூஸட் ஒரு கட்டத்தில் பித்துப் பிடித்து கடுமையான மூளை நோய் (Meningoencephalitis) தாக்க 2015ஆம் ஆண்டு மரணம் அடைந்தார். அதன்பின் மீண்டும் அந்த வழக்கு பரபரப்பானது. 'பார்க் ஸ்ட்ரீட் ரேப் விக்டிம்' என்று மீடியா இந்த வழக்கை முன்னெடுக்க, நீதிமன்றத்தில் விசாரணைகள் நடந்தன. ஐவரில் மூவருக்கு சிறை தண்டனை கிடைக்க, காதர் கான் உட்பட இரண்டு நபர்கள் இன்னும் சட்டத்தின் முன் தண்டனை அளிக்கப்படாமல் உள்ளனர். தலைமறைவு வாழ்க்கை நடத்தி வந்தாலும் விரைவில் அவர்களுக்கு தண்டனை கிடைக்கும் என்று நம்பப்படுகிறது.

இந்த உண்மைச் சம்பவங்களுடன் புனைவுகளை கலந்து, சில மாற்றங்களைச் செய்து 'பிங்க்' கதையை சூஜித் சர்கார், ரிதேஷ் ஷா, அனிருத்தா ராய் சௌத்ரி உருவாக்கினர். இந்தப் படத்தில் வழக்கறிஞராக நடித்த அமிதாப் பச்சனும், மினாலாகத் தோன்றிய தாப்ஸியும், மிகச் சிறப்பாக தங்கள் கதாபாத்திரங்களை வெளிப்படுத்தி இருந்தனர். இயக்குநர் அனிருத்தா ராய் சௌத்திரி இதுவொரு படம் என்பதையும் தாண்டி சமூகத்துக்கு ஒரு உண்மைச் செய்தியை கூற முடிந்ததில் மகிழ்ச்சி என்றார். இதுதான் 'பிங்க்' படத்தின் முன்னணி, பின்னணி கதை.

இனி 'பிங்க்' திரைப்படத்தின் தமிழ் மறு ஆக்கமான 'நேர்கொண்ட பார்வை' இதை எப்படி அணுகி யிருக்கிறது என்று பார்ப்போம்.

தமிழில் ரசிகர்களால் பெரிதும் கொண்டாடப்படும் நடிகர் அஜித். அவர் அமிதாப் பச்சன் ஏற்று



நடித்த, 20 நிமிடமே படத்தில் தோன்றக் கூடிய ஒரு கதாபாத்திரத்தில் நடிப்பது படத்தின் வியாபார விஷயங்களை சிக்கலாக்கிவிடக் கூடும். எனவே, சில வணிகரீதியான காட்சிகளை இணைத்து, அதேநேரம் ‘பிங்க்’ திரைப்படத்தின் மூலக் கதையை சிதைக்காமல் தமிழில் தந்திருக்கிறார், இயக்குநர் ஹெச்.வினோத். இவரது முந்தைய படங்களான ‘சதுரங்க வேட்டை’, ‘தீரன் அதிகாரம் ஒன்று’ ஆகியவை தமிழில் பெரிதும் கவனம் பெற்றவை என்பது குறிப்பிடத்தக்கது.

தமிழுக்கு முற்றிலும் புதிதான, வித்தியாசமான ஒரு கதையை இந்தத் திரைப்படம் முன் வைக்கிறது. அந்தவகையில், அஜித் இத்திரைப்படத்தில் நடித்திருப்பது பாராட்டப்பட வேண்டிய விஷயம். ஒரு வெகுஜன நடிகர் நடித்த காரணத்தால்தான் ‘நேர்கொண்ட பார்வை’ மக்களின் கவனத்தை பெற்றது. வணிகரீதியாகவும் வெற்றியடைந்தது.

அமிதாப் ‘பிங்க்’ திரைப்படத்தில் வயதானவராக நடித்திருப்பார். ஆனால், தமிழில் அஜித் ரசிகர்கள் ஏமாற்றத்துக்கு உள்ளாகக்கூடாது என்று, அஜித்தை நடுத்தர வயதில், அவரது இயல்பான தோற்றத்தில் நடிக்க வைத்திருக்கிறார் இயக்குநர். மேலும், பிங்கில் இல்லாத சில காட்சிகளை, அஜித்துக்காக, அதே சமயம் மிகையற்று, கதையின் போக்குடன் வருமாறு அமைத்துள்ளார்.

‘நேர்கொண்ட பார்வை’ படத்தில் மக்கள் நலன் கருதி பல வழக்குகளை இலகவசமாகவே நடத்திக் கொடுக்கும் பரத் சுப்ரமணியம் என்ற வழக்கறிஞர் கதாபாத்திரத்தில் மிகக் கச்சிதமாகப் பொருந்துகிறார் அஜித். நீதிமன்றத்தில் மிகவும் நிதானமாக வாதாடும்போது எதார்த்தமான நடிப்பை அளித்திருக்கிறார்.

பொதுநலனின் தன்னை கரைத்துக்கொண்ட பரத் சுப்ரமணியம், ஒரு சமயம் கர்ப்பிணி மனைவியை (வித்யா பாலன்) நிறைமாதத்தில் தனியாக இருக்க விடுவதால், அச்சமயம் நேர்ந்த விபரீதத்தால் அவரது மனைவி உயிரிழக்க நேர்கிறது. அதன்பின் தன்னிரக்கத்தாலும், தன்னால்தான் மனைவியும் அவர் கருவுற்றிருந்த இரட்டை குழந்தைகளும் இறந்தனர் என்ற குற்றவுணர்வாலும் கடும் மன அழுத்தத்திற்கு உள்ளாகிறார். அவரை கட்டுப்படுத்தவும் சராசரி வாழ்க்கையை வாழவும் மருந்துகளின் துணையும் அவரது தூரத்து உறவினரின் உதவியும் தேவையாக இருக்கிறது.

இந்நிலையில்தான் அவர் தன் எதிர்வீட்டுப் பெண்களான மீரா கிருஷ்ணன் (ஷ்ரத்தா ஸ்ரீநாத்), அவரது இரண்டு தோழிகள் ஃபலாக் (அபிராமி), ஆண்ட்ரியா (ஆண்டிரியா) ஏதோ பிரச்சினையில் சிக்கி வெளியே கூற இயலாமல் தவிக்கிறார்கள் என்று அவதானிக்கிறார். மூலக் கதையிலிருந்து பெரிய மாற்றங்கள் இல்லாமல் தமிழில் இக்காட்சிகளை மறு ஆக்கம் செய்திருப்பது சிறப்பு. தமிழில் அரசு தரப்பு வழக்கறிஞராக ரங்கராஜ் பாண்டே நடித்துள்ளார். அஜித்தும் பாண்டேயும் தோன்றும் காட்சிகள் பரபரப்பாக இருக்கின்றன.

‘பிங்க்’ படத்தின் அசலான திரைக்கதை, அதன் நம்பகத்தன்மை, படம் இருண்மையாகவே இறுதிவரை காட்சிப்படுத்தப்பட்ட விதம் உள்ளிட்ட சிலவற்றுடன் ஒப்பிடுகையில் ‘நேர்கொண்ட பார்வை’ சில இடங்களில் மாறுபட்டிருந்தாலும், தமிழ் இயக்குநர் ஹெச்.வினோத்தும் வெற்றி அடைந்துள்ளார்.

பெண்கள் அப்பாவிகள், அவர்கள் அனுதாபத்துக்குரியவர்கள், காதலித்த ஆணால் ஏமாற்றப்பட்டு நிர்க்கதியாக




நிற்பவர்கள் என்றபடியாகத்தான் இதுவரை தமிழ் திரைப்படங்களில் நீதிமன்றத்தில் காண்பிக்கப்படும் பெண் கதாபாத்திரங்கள் சித்தரிக்கப்பட்டுள்ளது. உதாரணத்துக்கு 1984ஆம் ஆண்டு வெளியான 'விதி'. அதன் பின் 1994ஆம் ஆண்டு வெளியான 'பிரியங்கா' (இது இந்தியில் வெளிவந்த 'தாமினி' என்ற படத்தின் மறு ஆக்கம்) வீட்டு வேலை செய்ய வந்த பெண்ணை பாலியில் துன்புறுத்தலுக்கு ஆளாக்கிய ஒரு நபரைப் பற்றி பேசியது. அதிலும் சூழலின் கைதியான அந்த இளம் பெண்ணின் மீது பார்வையாளர்கள் இரக்கப்படும்படிதான் சித்தரிக்கப்பட்டிருப்பார்.

ஆனால்,'பிங்க்','நேர்கொண்ட பார்வை'யில் வரும் பெண்கள் இத்தகையவர்கள் அல்ல. மாறாக அவர்கள் துணிச்சலானவர்கள். தன் குடும்பத்தை விட்டு தனியாக ஒரு வீடெடுத்து தங்கி தங்கள் வாழ்க்கையை, தங்கள் எதிர்காலத்தை தாமே தீர்மானித்துக்கொள்ளும் துணிச்சல் மிக்கவர்கள். தெரிந்தேதான் அவர்கள் அந்த பப்புக்குச் செல்கிறார்கள். அவர்களுக்கு அளிக்கப்பட்ட மதுவை பருகிவிட்டு, சில மணி நேரம் உரையாடிவிட்டுக் கிளம்பலாம் என்றுதான் அந்த ஆண் நண்பர்களுடன் அவர்கள் கிளம்பிச் சென்றனர். ஆனால், சூழல் அவர்களுக்கு எதிராக திரும்பிய போது, மீரா தன்னை தற்காத்துக்கொள்ள எதிராளியை தாக்கிவிட்டுத் தப்புகிறாள். நீதிமன்றத்தில் அவள் எதையும் மறைக்கவில்லை. ஆனால், அவளுக்கு எதிராக தொடுக்கப்பட்ட வழக்கில், அவளை பாலியல் தொழில் செய்யும் பெண்ணாக ஜோடிக்கப்பட்ட போது மனம் நொறுங்கிப் போகிறாள். எந்தப் பெண்ணும் தன் சுயம் பாதிக்கப்பட்டு, அவமதிப்பு ஏற்பட்டால் கலங்கிப் போவது இயல்புதான். மீரா அத்தகைய பாதிப்புக்குள் சென்றாலும் அதிலிருந்து மீண்டு, தனக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்பதில் உறுதியாக இருக்கிறாள்.

இப்படத்தின் பெண் கதாபாத்திரங்கள் மது அருந்தும் பழக்கம் உடையவர்களாகவும், ஆண் நண்பர்களுடன் சகஜமாக பழகுபவர்களாகவும் இருக்கிறார்கள். அதிலும் ஒருவர், மீராவின் தோழி (அபிராமி), திருமணமான ஒரு ஆணுடன் உறவில் இருப்பதாகவும் காண்பிக்கப்படுகிறார். இவர்கள் தப்பானவர்கள் என்று அக்கம்பக்கத்தில் வசிக்கும் சிலர் கூறுகிறார்கள். இவர்கள் இவ்வாறு உடை அணிந்து, சுதந்திரமாக மனம்போன போக்கில் வாழ்ந்தால், இதுபோன்ற பிரச்சினைகளில் ஏன் சிக்கமாட்டார்கள் என்று தோன்றும். இதைத்தான் இந்தப் படம் கேள்வி எழுப்புகின்றது.

ஆண்களைப் போல ஒரு பெண் தனியாக வாழ்ந்தாலோ, ஆண் நண்பர்களுடன் விருந்துகளுக்குச் சென்றாலோ அதை தவறாகப் பார்க்கும் வழக்கம்தான் பொதுபுத்தியில் அன்றும் இன்றும் உள்ளது. மது அருந்துவது உடல் நலத்துக்கு தீங்கு என்பது ஆண் - பெண் இருபாலருக்கும் பொருந்தும் ஒரு விதிதான். ஆனால், ஆண் என்ன வேண்டுமானாலும் செய்யலாம், பெண் இப்படித்தான் இருக்க வேண்டும்; அப்படி இருக்காத பெண்கள் ஏதாவது பிரச்சினையில் சிக்கினால் நன்றாக வேண்டும் என்று நினைக்கும் மனநிலை பலருக்கு இருப்பது மனிதத் தன்மைக்கு எதிரானது.

ஒரு ஆணுக்கு இருப்பதைப் போலவே பெண்ணுக்கும் இந்தச் சமூகத்தில் சுயமாக வாழ உரிமை இருக்கிறது. ஆனால், சம உரிமை என்பது இன்றளவும் பேச்சளவில்தான் உள்ளதே தவிர நடைமுறையில் இருப்பதில்லை.

அதேநேரம், சுதந்திரம் என்ற பெயரில் பெண்கள் சிகரெட் புகைப்பதும், மது அருந்துவதும், பாலியல் விருப்பங்களில் அதீதமாக ஈடுபடுவதும் சரி என்று சொல்ல வரவில்லை இந்தத் திரைப்படம். ஒரு ஆண், ஆண் என்ற காரணத்தாலேயே எல்லாவற்றையும் அலட்சியமாக செய்து கொள்ள, ஆண் மனோபாவம் கொண்ட பெண்கள் அதற்குத் துணை நிற்க, உண்மையில் சுதந்திரமாக வாழ நினைக்கும் பெண்களுக்கு பல விஷயம் மறுக்கப்படுவதும், அவர்கள் மலினமாக மற்றவர்களால் பார்க்கப்படுவதும் தவறு என்பதை வலியுறுத்திச் சொல்வதுதான் இத்திரைப்படம். ஆண்களின் சுதந்திரம் என்பது இச்சமூகத்தில் இயல்பாக இருப்பதும், அதுவே பெண்களுக்கு இன்றளவும் மறுக்கப்பட்டு வருவதும் குறித்தான விழிப்புணர்வை இது தருகிறது. சில கேள்விகளையும்

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கம் தொடர்ச்சி)



அதற்கான பதில்களையும் முன் வைக்கிறது.

ஒரு பெண், ஒரு ஆணுடன் திருமணம் வேண்டாத உறவில் (ரிலேஷன்ஷிப்) இருக்க விருப்பப்பட்டால் அதை இச்சமூகம் தடித்தனம், திமிர் பிடித்தவள் என்று சாடும். ஆனால், அவளுடன் இணைந்து வாழும் ஆணை ஒருபோதும் தவறான கண்ணோட்டத்தில் பார்க்காது. ஒரு ஆணை தன் வாழ்க்கையில் மட்டுமல்ல, உறவுக்கு அனுமதிக்கும் உரிமையையும் பெண்தான் தர வேண்டும். பாலியல் உறவு பிரியத்துடனும் ஒருவருக்கொருவரின் விருப்பத்தோடுதான் நடக்க வேண்டும். திருமணம் முடித்தவிட்ட காரணத்தாலோ, ஆணாதிக்க மனநிலையிலோ நிகழக் கூடாது. உடல் வேட்கையால், தானாக ஒரு பெண்ணை வல்லுறவுக்கு உட்படுத்தும் உரிமை எந்தவொரு ஆணுக்கும் இல்லை. அவன் வல்லுறவுக்கு உட்படுத்துவது, சொந்த மனைவியாக இருந்தாலும் சரி, பாலியல் தொழிலாளியாக இருந்தாலும் சரி, காதலியாக இருந்தாலும் சரி, அந்தப் பெண் தனக்கு இச்சமயத்தில் இவ்விஷயத்தில் 'விருப்பமில்லை' என்று சொன்னால், அவன் அவள் மனநிலையை புரிந்துகொண்டு விலகிவிடுவதுதான் சரியானது. இதைத்தான் இந்தப் படம் வலியுறுத்திக் கூறுகிறது.

பெண்களில் சமூகத்துடன் இணைந்து சந்தோஷமாக வாழ நினைப்பவர்கள் இன்று பெருகி வருகிறரகள். ஆனால், அவர்கள் இயல்பாக பேசி சிரிப்பதை, ஆண்களிடம் கலந்து பழகுவதை, அவர்கள் சின்னலாக ஆண்கள் புரிந்துகொள்கிறார்கள். இதை காதலாக நினைப்பவன் ஓரளவுக்கு ஆபத்தற்றவன், ஆனால், அதை அழைப்பாக நினைத்து அப்பெண்ணை ஸ்டாக் செய்பவன் (Stalk), அதாவது பின்தொடர்ந்து துன்புறுத்தலுக்கு உள்ளாக்குபவன் தண்டனைக்குரியவன். இத்தகைய ஆண்கள் தங்களுடைய எண்ணத்தை மாற்றிக்கொள்ள வேண்டும் என்ற செய்தி இந்தத் திரைப்படத்தில் உள்ளது.

பூனை கண்களை மூடிக்கொண்டு, உலகம் இருண்டுவிட்டது என்று கூறுவதுபோல, இன்றும் பழமைவாதிகள், எல்லாம் முந்தைய காலத்தில் இருப்பதைப் போலத்தான் இப்போதும் இருக்கிறது என்று நினைத்துக்கொள்கிறார்கள். ஆனால், உண்மை அதுவல்ல. படிப்பதற்கும் வேலையில் சேர்ந்து வாழ்க்கையில் செட்டில் ஆவதற்கும் பிடிக்கும் கால அவகாசத்தின் இடையே, வாழ்வின் முக்கிய பருவமான இளமைப் பருவத்தை இழந்துவிடக் கூடாது என்று நினைத்து, ஆண் - பெண் ஒத்திசைந்து லிவ் இன் உறவில் இருக்கும் காலகட்டம் இது. விருப்பம் இருந்தால் அது திருமண பந்தத்தில் தொடர்ந்தும், விருப்பம் இல்லாத நிலையில் பிரிந்தும் விடுகிறார்கள். அங்கொன்றும் இங்கொன்றுமாக இருந்த இது இப்போது பலரின் வாழ்க்கை முறையாக மாறிவிட்டது. இதில் சரி தவறு என்பதை எல்லாம் தாண்டி, மாறிக் கொண்டிருக்கும் ஒரு காலகட்டத்தின் குழப்பமான ஒரு நிலைதான் இது என்ற மிகச் சரியான செய்தி, இந்தத் திரைப்படத்தில் வேறொரு தளத்தில் கூறப்பட்டிருக்கிறது.

பெண்கள் தங்கள் பாலியல் விருப்பங்களை வெளிப்படையாக சொல்லமாட்டார்கள்; அவர்கள் வேண்டாம் என்று சொல்வது வேண்டும் என்பதற்கான அழைப்புத்தான் எனும் அபத்தமான கருத்துக்கள் முந்தைய காலகட்டத்துக்குவ் வேண்டுமானால் சரியாக இருந்திருக்கலாம். ஆனால், இது நவீன காலம். எந்த ஒரு பெண்ணும் 'நோ' என்று சொல்லிவிட்டால் அதற்கு 'நோ' என்பது மட்டும்தான் ஒரே அர்த்தமாக இருக்க முடியும். இந்த மையச் செய்தியை மிகவும் அழுத்தமாக 'நேர்கொண்ட பார்வை' திரைப்படத்திலும் உள்ளது. இது பெண்களுக்கான படமல்ல; ஒவ்வொரு ஆணும் பார்க்க வேண்டிய திரைப்படம். ●

**உமா ஷக்தி <um.parvathy@gmail.com>**

# தன்னுடனான உரையாடல்

ஆனந்த்

கல் முதலை ஆமைகள் - ஷங்கர்ராமசுப்ரமணியன்; விலை ரூ. 180; வெளியீடு: க்ரியா, 2 முதல் தளம், 17ஆவது கிழக்குத் தெரு, காமராஜர் நகர், திருவான்மியூர், சென்னை - 600 041; கைபேசி: +91 72999 05950

எல்லோரும் கவிதை எழுத வந்துவிடுவதில்லை; எல்லோருக்கும் அசலான கவிதை எழுத வருவதுமில்லை. ஏனெனில், கவிதை என்பது தன்னுடன் தான் கொள்ளும் உரையாடல். இது எல்லோருக்கும் சாத்தியமில்லை. ஒருவிதத்தில் எல்லோரும் தனக்குள் தனக்குத் தானே பேசிக்கொண்டுதான் இருக்கிறோம். ஆனால், இவ்வாறு பேசுவதெல்லாம் கவிதையாகிவிடுவதில்லை.

பிறகு எது கவிதை? தான் இருப்பது தனக்குத் தெரிந்தவர்கள் மிகவும் குறைவு. பொதுவாக தன் நினைவு வரிசையைக் கணக்கில் எடுத்துக்கொண்டு அதையே ‘தான்‘ என்று கருதி வாழ்வபவர்கள்தான் உலகம் முழுவதும் நிறைந்திருக்கிறார்கள். அவர்களுக்குள் தொடர்ந்து இடையறாது ஒரு சிந்தனையோட்டம் நடந்துகொண்டே இருக்கிறது. ஆனால், அது அந்தத் தனிமனத்தின் சிந்தனை இல்லை. பொதுமனத்தின் இயந்திரத்தனமான சிந்தனையோட்டம் அது. பெரும்பாலானோர்க்குத் தூங்கும்போதுகூட அது நடந்துகொண்டேதான் இருக்கிறது.



வெகு சிலருக்குத்தான் ‘நான் இருக்கிறேன்‘ என்று தெரிகிறது. தன்னைத் ‘தான்‘ என்று தெரிகிறது. இந்த உலகில் தனிமனிதர்கள் மிகக் குறைவு. குடும்பம், இனம், ஜாதி, மதம், நாடு, மொழியினம் போன்று ஏதோ ஒரு குழுவுடன் தன்னை இணைத்துக்கொண்டு அந்த இணைப்பின் விளைவாகத் தனக்குள் எழும் சுய உணர்வையே ‘தான்‘ என்று நினைத்துக்கொண்டுவிடுகிறோம்.

உடலும் புலன்களும் ஒரு தளம். மனமும் அதன் நினைவுகளும் இரண்டாவது தளம். அதற்கு அடிப்படையாக உள்ள ‘நான்‘ என்னும் தளம் மூன்றாவது. மனத்தளத்தில் சமூக கலாச்சார சக்திகள் முழுமையின் பார்வையைச் சிதைத்து, சில அம்சங்களைப் புறம்தள்ளி, வேறு சில அம்சங்களைத் தன்னுணர்வின் எல்லைக்கு வெளியே விலக்கிவைக்கிறது. இந்த முறைப்பாட்டின் விளைவாக எழுந்த சிதைந்த சுயத்தையே, அந்த ஆளுமையையே ‘தான்‘ என்று சமூகம் நம்பவைக்கிறது. நாமும் நாடு, மதம், ஜாதி, மொழி, இனம் போன்றவற்றை அடிப்படையாகக்கொண்ட இந்த ஆளுமையை நம் சுய அடையாளமாக எடுத்துக்கொள்கிறோம்.

ஆக, நமக்குள் ‘நான்‘ என்னும் அடிப்படைச் சுயவுணர்வு இருக்கிறது. அதன் பின் மனத்தில் ‘தான்‘ என்று தன்னை நினைத்துக்கொள்ளும் ஆளுமை இருக்கிறது. இந்த இரண்டு வியக்திகளுக்கிடையில் இடையறாத உரையாடல் நிகழ்ந்தவண்ணமே இருக்கிறது. ஆனால், நாம் ஆளுமையையே நான் என்று நினைத்துக்கொள்வதால் இந்த உரையாடல் ஆளுமையின் எல்லைகளைத் தொடர்ந்து காப்பதற்கே பயன்படுகிறது. இந்த விதமான உரையாடல் கவிதையாக முடியாது.

மிகச் சிலருக்குள் மட்டும் ‘நான்‘ உணர்வும் ஆளுமையும் வெவ்வேறானவை என்ற உள்ளுணர்வு பிறந்திருக்கிறது. இந்த மனங்களில் எழும் உரையாடல் வேறொரு ஆழமான தளத்தைச் சார்ந்ததாக இயங்குகிறது. இந்த உரையாடல்தான் கலைவெளிப்பாட்டின் ஊற்றாகச் செயல்படுகிறது.

இந்த உரையாடல் ஒருவரின் மனத்தில் தொடங்கும்போது அவருக்கு அது ஆழமான வேதனையை ஏற்படுத்த வல்லது. ஆளுமையின் கட்டமைப்பையே இந்த உரையாடல் மாற்றம்கொள்ளச் செய்வதால், மனத்தில் குழப்பத்தையும் தொந்தரவையும் விளைவிக்கிறது. தொடர்ந்து நிகழும் உரையாடல் ஒருவரின் சுய அடையாளத்தின் கட்டமைப்பையே மாற்றியமைக்கிறது. ஒருவருக்குள் நீண்ட காலத்துக்கு நிகழக்கூடிய முறைப்பாடு இது. ஒருவரது நீண்ட கால கவிதைப் பயணத்தை பரிசீலித்துப் பார்க்கும்போது இந்த முறைப்பாடு தெளிவாகத் தெரிய முடியும். அந்த உரையாடல் படிப்படியாக ஆழமும் செறிவும் அடைந்து வருவதைக் காண முடியும். இந்த வளர்ச்சி அவரது கவிதைகளில் பிரதிபலிப்பது தெளிவாகப் புலப்படும்.

ஷங்கர்ராமசுப்ரமணியனின் கவிதைகளின் வளர்ச்சியைப் பார்க்கும்போது இந்த விஷயம் தெளிவாகத் தெரிகிறது. ‘ஞாபக சீதா’, ‘ஆயிரம் சந்தோஷ இலைகள்’ தொகுப்புகளிலிருந்து இவரது கவிதை இப்போது, இந்தத் தொகுப்பில் உள்ள கவிதைகளில் எந்த அளவுக்கு ஆழமும் அகலமும் அடைந்திருக்கின்றன என்று தெரிகிறது. சில விஷயங்கள் மாறியிருக்கின்றன; சில விஷயங்கள் மாறவில்லை.

உதாரணமாக, இவர் நடைமுறை நிகழ்வுகளை நேரடியாக, எளிமையாகப் பதிவு செய்யும்போது, அந்த நிகழ்வுகளையோ அல்லது அது பற்றிய இவரது எதிர்வினைகளையோ பதிவு செய்வதற்கு மாறாக, அவற்றை மனநிலைகளாகப் பதிவு செய்கிறார். ‘ஞாபக சீதா’ தொகுப்பில் ‘புதியவள்’ கவிதையிலும், ‘ஆயிரம் சந்தோஷ இலைகள்’ தொகுப்பில் ‘அதிரும் வனம்’



*கவிதையிலும் இந்த அம்சத்தைப் பார்க்கலாம்.*

*இப்போது, இந்த 'லாஸ்யம்' தொகுப்பில், 'அன்புள்ள நகுலனுக்கு' என்னும் கவிதை.*

அன்புள்ள நகுலனுக்கு  
சென்ற ஞாயிறன்று  
கவிஞர் வே. பாபு  
இறந்துவிட்டார்  
உங்களது மென்கிளை அவர்  
என்பதை நீங்கள் அறிந்திருக்கலாம்.  
கடந்த சில நாட்களாக  
நான்  
பார்க்கும் செவ்வரளிப் பூக்கள்  
மேலும் சிவந்திருக்கின்றன.

*இதிலும் மனநிலையைப் பதிவு செய்யும் அந்தத் தன்மை இருந்தாலும், இது வேறொரு புதிய ஆழத்தை அடைந்திருப்பதைப் பார்க்க முடிகிறது.*

*இவரது மொழிக்கட்டமைப்பு உடைந்துபோய், புதிய சொல்வெளிகளைத் திறந்துவிட்டிருக்கிறது,*

இந்த இரவில்  
தூங்காத  
பொருள்கள்  
உயிர்களாலான  
ஒரு உலகம்  
ஊஞ்சலாக ஆடிக்கொண்டிருக்கிறது  
க்ரீச்... க்ரீச்... க்ரீச்...

*நிறையக் கவிதைகளில் காமத்தின் மெல்லதிர்வு சில நேரம் நுட்பமான பின்னணியாகவும் சில சமயம் உரத்து வெளிப்படையாகவும் விகசிக்கிறது. உடல் சார்ந்த உணர்வுகள் அனுபவத்தின் ஆழத்தைக் கூட்டுகின்றன.*

ஒரு பறவையை அதன் வாலின் துடிப்போடு  
நிகழ்கணத்தில் அப்படியே பார்க்கவேண்டும்  
கடக்கும் பெண்ணின் உடல் எழிலை  
குட்டிக் குழந்தைகளை  
தன்னிரக்கமின்றி ரசிக்க வேண்டும்

சென்றவளின் சுவடின்றி  
இந்தக் கோடை தரும் காதலுணர்வை  
என் உதடுகளை நானே தடவி  
ருசிப்பதைப் போல  
நான் தனியே சுவைக்க வேண்டும்.

*இந்தத் தொகுப்பில் பூனை பற்றிய கவிதைகளைக் குறித்துத் தனியே ஒரு கட்டுரை எழுதவேண்டும். மனவெளியின் பல மடிப்புகளை அவை வெளிக்காட்டுகின்றன. பூனை ஒரு படிகமெனத் தன் பல முகங்களின் வழியே உலகைப் பல கோணங்களில், அதன் வலியுடன், வேதனைகளுடன், கூடவே மெல்லிய சிரிப்புடன், காட்டுகின்றன. சங்கு புஷ்பங்களும் இவரது கவிதைகளில் புதிய மொழி பேசுகின்றன.*

*ஆத்மாநாம், தேவதச்சன், அசோகமித்ரன், தேவதச்சன் என்று நாமறிந்த பலர்*




ஷங்கர்ராமசுப்ரமணியனின் கவிதை உலகில் சகஜமாக நடமாடுகிறார்கள். இவரது பார்வை வழியே அவர்கள் பார்க்கிறார்கள்.

இவரது கவிதைகளில் இன்னொரு முக்கியமான அம்சம், கவனப் புள்ளி நிகழ்வுகளில் மையம்கொள்வதற்கு மாறாக, கணத்துக்குக் கணம் தோன்றும் மாற்றங்களைப் பிரதிபலித்து அதனுடனே நகர்கின்றன.

கவிதை தன்னுடனேயான உரையாடல் என்று சொன்னோம். இவரது முந்தைய கவிதைகளில் இந்த விஷயம் உள்ளீடாக இருந்தாலும் இந்தத் தொகுப்பில், 'தெரியாதா பேரன்பே' என்னும் கவிதை, தன்னுடனேயான நேரடி உரையாடலாக இருக்கிறது. வெவ்வேறு கோணங்களில் தன்னையே தனக்குக் காட்டி, தன்னைத் தானே பார்த்து, புதிய பார்வைகளையும் அர்த்தங்களையும் தானும் பார்த்து, வாசகருக்கும் காட்டுகிறது. சமயங்களில் உச்சாடனத்தின் தன்மையைக் கொள்கின்றன சில கவிதை வரிகள்.

### தெரியாதா பேரன்பே

தெரியாததன் பெருந்துளையிலிருந்து தானே
அவள் வந்தாள்
வந்த துளைக்குள்ளேயே
அவளும் மறைந்து போனாள்
காதலும் மறைந்தது
தெரியாததற்குள்

நீ
இதுவரை எதையெல்லாம் தவறவிட்டிருக்கிறாய்
சங்கரா
சிறுபையனாய்
எத்தனை நாணயங்களை
தெரியாமல் தெரியாமல்
அதற்கெல்லாம் காரணம்
தெரிந்ததா தெரியுமா
சங்கரா

தெரியாததை நோண்டாதே
சங்கரா
தெரியாததற்கு முன் தண்டனிடு சங்கரா
தெரியாததற்குள்
உன் ஆசைகளையும் நினைவுகளையும்
அள்ளியள்ளி இடு
அப்போது
தகிக்கும் வெயிலில்
எரியும் உன் சடலத்தின் புகை
உனக்குச் சுகந்தமாகும் சங்கரா.

தொலைத்துவிட்ட காதலில் தொடங்கி, வாழ்க்கையில் இதுவரை தொலைத்ததையெல்லாம் பார்த்துவிட்டு, மரணத்தின் கணம் வரையில் பயணம்கொள்கிறது இந்தக் கவிதை. மரணம் என்பதை உடலில் அழிவு என்று பார்க்காமல், அனுபவத்தின் முடிவாகப் பார்க்கிறது இவரது இந்தக் கவிதையும் இன்னும் பல கவிதைகளும்.

'ஜாங்கோ ஜாங்கோ' கவிதையும் தன்னுடனேயே பேசும் கவிதைதான். ஆனால், இதன் தொனி வேறு. 'சங்கரா' என்பது 'ஷங்கர்' ஆகிவிட்டது! இதுவும் காதலின் வலியை, பிரிவின் வேதனையை, அதன் நிலையற்ற கடத்தலை, தொடர்ந்து கடந்து செல்லும் அந்தப் பயணத்தின் இரக்கமற்ற ஓட்டத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியத்தைத் தனக்குத் தானே காட்டிக்கொள்ளும் தன்னுடனேயான உரையாடல் இது.

ஷங்கர்ராமசுப்ரமணியனின் வாழ்க்கை குறித்த பார்வை, உள்ளே அருவ வெளியில் திளைத்துக் காணாமல் போய்விடவில்லை. அதே சமயம் தினசரி வாழ்வின் ஆழமற்ற தன்மையில் தொலைந்துபோய்விடவும் இல்லை. உணர்ச்சிகளின் பாய்ச்சலிலும் சுழிகளிலும் சிக்கிக்கொண்டு விடாமல், கரையுடைந்து கட்டற்றுப் போய்விடாமல், உள்ளார்ந்த சமநிலையுடன் ஆழமாகவும் சீராகவும் ஓடுகின்றன இந்தக் கவிதைகள். ●

**ஆனந்த் <anandh51ad@gmail.com>**

---

(புத்தகத்தில் இடம்பெற்றிருக்கும் முன்னுரை)

# ஜான்சுந்தர் கவிதைகள்

## கவிராயர்

போதுமான அளவு கண்ணீரைச் சொரிந்தார்.
துயரஞ்சொட்டுவதை சுற்றிவந்து பார்வையிட்டார்.
துருத்திய சொற்களை காம்போடு கிள்ளியெறிந்து
சேகரித்த சடலங்களை வேரடிப் பள்ளங்களில் இட்டு நிரப்பினார்.
தோழர்கள் உச்சுக் கொட்டும் கதைக்கெல்லாம்
சப்புக்கொட்டினாரில்லை கலைமனக்கவி.
தேனீர்க் கடையருகே தவழ்ந்து போனவனை
உறிஞ்சியபடியே கவனித்து அன்றிரவே மேசையில் வைத்து கொன்றார்.
வெறுங்கழுத்துக்காரியின் ரவிக்கைப் பிதுக்கலில்
நல்லதோர் கிழிசலைப் பொருத்தி சிற்றிதழுக்கு அனுப்பி வைத்தார்.
கவி குடிகொண்ட 'சரஸ்வதி விலாஸ'த்தை
கோலூன்றிக் கடந்ததோர் உடல்.
நிமிர்ந்த அதன் நன்நடையில் 'கலைக்குறை'வைக் கண்டார் கவி.
எனவே, அறம் மிகுந்த அவரது புதிய தொகுப்பில்
இடம்பெறவில்லை அவ்வுடல்.
நாளுக்கொரு முறையாகிலும்
கலையுதிக்குந்தருணத்தைக் காணாது
சோறு தண்ணியிறங்காது அமரகவிக்கு.
நேற்றெல்லாம் 'படாதபாடு'பட்டார் பாவம்.
சாலையின் நிறத்தை
கிழட்டுச்சதைக்கூழ் கொண்டு மாற்றிய பின்புதான்
ஓரளவு திருப்தியாகி
சாப்பிடவே உட்கார்ந்தார் கருணாமூர்த்தி.



## செல்லப்பூனைக்குட்டி

நாய்களை கொண்டாடுகிறேன் என்பதால் கோபங்கொள்கிறாய்
நீ ஒருபோதும் விசுவாசமாய் இருப்பதில்லை பூனைக்குட்டி.
எல்லா மடிகளின் சூடும் உனக்கு வேண்டியிருக்கிறது.
தினமொரு மீன் கொடுத்துவந்த சைக்கிள்
ஆகப்பெருஞ்சக்கரத்தினடியில் நசுங்கிக் கிடக்கையில்
லாரிக்காரனின் காலையுரசிக்கொண்டிருக்கிறாய்
என் செல்லப்பூனைக்குட்டி ●

ஜான் சுந்தர் <ilayanilajohnsundar@gmail.com>

# ஈழப்போரின் இறுதிநாட்கள்

டிசே தமிழன்

*90களில் இயக்கத்தில் இணைந்து, அடுத்த சில ஆண்டுகளில் போராட்டத்தின் நிமித்தம் ஒரு கையையும் கண்ணையும் இழந்து, கிட்டத்தட்ட 18 வருடங்கள் போராளியாக இருந்த ஒருவர், ஈழப்போராட்டத்தின் இறுதிக்கட்டத்தில் நேரடியாகச் சாட்சியாகஇருந்து எழுதிய ஒரு வரலாற்றுப் பதிவு இது.*

ஈழத்தில் இறுதி யுத்தம் நமது கற்பனைகளுக்கு அப்பாற்பட்டு நிகழ்ந்து, பெரும் கொடூரத்துடன் நடந்து முடிந்திருக்கின்றது. போர் நிகழ்ந்து கொண்டிருந்தபோது பெரும் அழிவுகளைச் சந்தித்தவர்கள், போர் முடிந்தபின்னும் இன்னும் பெரும் உளவியல் நெருக்கடிகளை இராணுவம் / தடுப்புமுகாம் வாழ்க்கை என அனுபவிக்க வேண்டியிருந்தது.

போராளியாக இருந்த வெற்றிச்செல்விக்கு புலிகளின் தலைவர் இறந்துவிட்டார் என்ற களச்செய்தியைக் கேட்டபின், அவரைப் போன்ற ஆயிரக்கணக்கான போராளிகளைப் போல அடுத்து என்ன முடிவு செய்வது என்பது பெரும் சிக்கலாகின்றது. இறுதியில் அவரின் உயிர் போவது இரண்டு இடங்களில் தடுத்து நிறுத்தப்படுகின்றது. மக்களோடு சேர்ந்து சரணடையாமல் சயனைட் குடிப்பதை ஒரு இயக்கத் தம்பி தடுத்து நிறுத்துகின்றார். 'இனி எல்லாம் முடிந்தபின் இறப்பது என்பது வீணானது. தயவு செய்து சயனைட் அடித்துவிடாதீர்கள். இப்படித்தான் காயங்களோடு பங்கருக்குள் நின்றவர்களுக்கு முதல்நாளிரவு சொன்னேன், அடுத்தநாள் காலையில் போய்ப் பார்த்தால் எல்லோரும் சயனைட் அடித்துக் கிடக்கின்றார்கள். நீங்களும் அதைச் செய்துவிடாதீர்கள்' என இவர்கள் பதுங்கு குழிக்குள் கிடக்க, தன்னைத் தரையோடு தரையாக சாய்த்துக்கொண்டு விழும் எறிகணைக்களுக்கிடையில் அந்தத் தம்பி மீண்டும் மீண்டும் வலியுறுத்துகின்றான். வாழ்வா சாவா என்று முடிவுசெய்யும் நாணயச்சுழற்சியில் வாழ்வு வெல்கின்றது.



இன்னொருமுறைஇராணுவத்தை முதன்முதலாகச் சந்திக்கையில் சயனைட்டை மீண்டும் வாயில் வைக்க முயல்கையில் வெற்றிச்செல்வியோடு இருக்கும் அவரின் பால்யகாலத் தோழியும், அந்தத் தோழியின் தாயாரும் தடுத்து சயனைட் குப்பியைப் பிடுங்கி நிலத்தில் புதைக்கின்றனர். இப்படியான ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் வெற்றிச்செல்வியை நாம் இழந்திருந்தால் ஒரு மாபெரும் சாட்சியத்தை இழந்திருப்போம் என்பதைவிட, ஒரு அருமையான போராளியை இழந்திருப்போம். மேலும், தன் கதைகள் எதையும் எமக்குச் சொல்லாமலே அவர் நம் நினைவுகளில் என்றென்றைக்குமாய் இல்லாமற்போயுமிருப்பார்.

இன்று ஈழப்போர் முடிந்து கிட்டத்தட்ட 10 ஆண்டுகள் முடிந்தபின், போர் பற்றிய நிறையச் சாட்சியங்கள், புனைவுகள் என வரத்தொடங்கிவிட்டன. ஆனால், அநேகமானவை தாம் சார்ந்த நம்பிக்கைகளுக்குள் மட்டும் சுருண்டுவிடுவதால் அங்கே பலவேளைகளில் உண்மைகள் காணாமல் எங்கையோ தொலைந்துவிடுகின்றன. வெற்றிச்செல்வி எவ்வாறு போராளிகளின் ஓர்மத்தை பெரும்போருக்குள் விபரிக்கின்றாரோ, அவ்வாறே கட்டாயமாகப் போரில் சேர்க்கப்பட்டவர்களின் உண்மை நிலைமைகளையும், அந்தப்பொழுதுகளில் மக்களின் மனோநிலை எப்படி இருந்ததென்பதையும் வெளிப்படையாகப் பேசுகின்றார். அதேவேளை இயக்கம் மீது ஆற்றாமையோடும் கோபத்தோடும் இருந்த பெரும்பகுதி மக்கள் போராளிகளை ஒருபோதும் கைவிடத் தயாராகவில்லை என்றும் குறிப்பிடுகின்றார். கட்டாயமாகச் சேர்க்கப்பட்டபோது வாரித்தூற்றிய மக்களே, பிறகு போராளியாகிப் பசியோடு அவர்கள் திரிந்தபோது, அவர்களை பசி தீர்த்து அரவணைத்தார்கள் என்பதையும் பதிவுசெய்கின்றார்.

இந்த இறுதி யுத்தம் நாம் நினைத்தே பார்க்க முடியாக் கொடூரம் நிறைந்ததாக இருந்திருக்கின்றது. எந்தப் பக்கத்திலும் எவ்வித நியாய / அநியாயங்களுக்கும் இடம் இருக்கவில்லை. எப்படி இருந்த மக்கள் இப்படியாயிற்றனரே என எல்லா மனித விழுமியங்களும் கரைந்து போய்விட்டிருந்த நாட்கள் அவை. போரின்போது நிகழும் அழிவுகளைப் போல போரின்பின் வந்த வெறுமையும் விரக்தியும் அவ்வளவு எளிதில் போகமுடியாதவை. அது தன் வாழும் காலம் முழுதும் தன்னோடு வரப்போகின்றது என்றே வெற்றிச்செல்வியும் குறிப்பிடுகின்றார்.

பத்தாண்டுகளான பின்னும், போரில் வெற்றிபெற்றபோதும் இன்றும் சிங்களப் பேரினவாதம் எதையும் விட்டுக்கொடுக்கவோ, பகிர்ந்துகொள்ளவோ தயாராக இல்லை. போராளிகளும் ஆயுதங்களும் இல்லாமலும்,தமிழ் அரசியல் தலைமைகள் என்போரும் மீளாத்துயிலில் இருக்கும்போதும், ஏனின்றும் தமிழர் நிலங்களில் பாரியளவிலான இராணுவ முகாங்களும் கண்காணிப்புக்களும், புத்தர் சிலையுடனான குடியேற்றங்களும் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என்பதைப் பற்றி யோசிக்க வேண்டியிருக்கின்றது. இயல்பான வாழ்க்கையும், தன்மொழி, இனம் சார்ந்து தன்னிருப்பு அச்சுறுத்தப்படாத போதும், ஒரு சமூகம் ஒருபோதும் போராடப் போவதில்லை என்பது பேரினவாத அரசுக்குத் தெரியாமல் இருக்கப் போவதில்லை. சிறுபான்மை இனங்களைத் தொடர்ந்து









தொந்தரவுபடுத்துவதன் மூலமே தமது அரசியல் இருப்பை வலுவாக்கலாம் என்ற பேரினவாத சிந்தனையை ஒழிக்காதவரை எந்தக் கட்சியோ அல்லது எவரோ அரசுபீடமேறினாலும் நாட்டில் அவ்வளவு எளிதில் சுபீட்சம் வந்துவிடப்போவதில்லை.

ஈழப்போரின் இறுதி நாட்கள் என்ற இந்நூல், 80களைப் போல அரசியல் சூழ்நிலை மீண்டும் வந்தாலும் / இருந்தாலும், நம்மை உணர்ச்சி அரசியலுக்குள் போகவிடாது, நமக்கு நிகழ்ந்த பேரழிவைத் திரும்பிப் பார்க்கச் சொல்கின்றது. நாம் இறுதி யுத்தத்தில் செய்த நம் பக்கத்து தவறுகளிலிருந்து வரலாற்றை இன்னும் பின்னோக்கி (இந்நூலில் அது இல்லாதபோதும்) சென்று நமது எல்லோருடைய தவறுகளையும் மீள்வாசிப்புச் செய்யச் சொல்கின்றது. கொந்தளிப்பான அரசியல் சூழ்நிலையிலும், அந்நிய நாடுகளின் தலையீட்டுக்கு இரையாகி ஆயுதங்களை மீண்டும் அவசரப்பட்டுத் தூக்கவேண்டாமென நம் அந்தரங்கத்தோடு உரையாடச் செய்கின்றது.

ஓர் உண்மையான போராளி, தான் போராட வந்ததன் நோக்கத்தை எந்தக் காலகட்டத்திலும் மறந்துவிடுவதில்லை. அந்த ஓர்மம், அந்தப் போராட்டம் தோற்றபின்னால்கூட எங்கோ ஓரிடத்தில் ஒளிர்ந்துகொண்டேதானிருக்கும். அதே சமயம் தங்கள் தவறுகளை ஒப்புக்கொள்ளவும், எதிரிகளென நினைத்துப் போராடியவர்களிடம் அவ்வப்போது வெளிப்படும் மனிதாபிமானத்தையும், மனந்திறந்து பாராட்டவே செய்யும் (வெற்றிச்செல்வியை பேரூந்தில் ஏற்றி தடுப்பு முகாமிற்கு ஏற்றிச்செல்லும் இளவயது இராணுவத்தினனின் மனிதாபிமானம் எவ்வித மறைத்தலுமின்றி இந்நூலில் சொல்லப்பட்டிருக்கின்றது).

ஈழப்போரில் இறுதியில் நடந்தவற்றை வாசிக்க - முக்கியமாய் எதையும் அறியவிரும்பாது தமக்கான 'உண்மை'களுடன் போராட்டத்தை விளங்கிக்கொள்ள முயல்வோர் - இந்நூலைத் தேடிக் கட்டாயம் வாசிக்கவேண்டும். இதை மட்டுமில்லை அப்பு எழுதிய 'வன்னி யுத்தம்' மற்றும் வெற்றிச்செல்வி இந்நூலின் தொடர்ச்சியாக தடுப்பு முகாம் வாழ்வைப் பற்றி எழுதிய 'ஆறிப்போன வலிகளின் காயம்' போன்றவற்றையும் வாசிக்கவேண்டும். ஆகக்குறைந்தது இவற்றை வாசித்தாலாவது உணர்ச்சிவசப்படாமல், போலிப்பெருமிதம் இல்லாமல், எங்கே அமைதியாக அரசியல் சார்ந்து இருக்கவேண்டுமென்பதையாவது நாம் கற்றுக்கொள்ளலாம். ●

Elanko M **<elanko@rogers.com>**

# நகைச்சுவையின் மூலமாகவே மாபெரும் துயரக் கதைகளை சொல்ல முடியும்!

ராபர்த்தோ பெனிகினி     தமிழில்: ராம் முரளி

மனிதநேயத்தை ஆழமாக வலியுறுத்தும் திரைப்படங்களின் வரிசையில் மிகுந்த முக்கியத்துவத்தைப் பெற்றிருக்கும் திரைப்படம் 'Life is beautiful'. யூத வதைமுகாமில் சிக்கியிருக்கும் ஒரு மனிதனின் மரணித்தலுக்கும் உயிர்ப்பித்திருப்பதற்கும் இடையிலான ஊசலாட்டத்தை இத்திரைப்படம் நெகிழ்வூட்டும் வகையில் பதிவு செய்திருக்கிறது.

இத்திரைப்படத்தின் நாயகரும் இயக்குனருமான ராபர்த்தோ பெனிகினி தனது இயல்பான நகைச்சுவையின் வாயிலாகவே, அந்த கொடும் வரலாற்று தருணங்களை அணுகி, நம் மனதில் பெரும் துயரத்தை ஏற்படுத்திவிடுகிறார். அவரது வெகுளித்தனம் படம் நெடுக நம்மை பல்வேறு உணர்ச்சிகளுக்கு உட்படுத்துகிறது. "இதுவொரு எளிமையான கதைதான் என்றாலும், சொல்வதற்கு அத்தனை எளிமையான ஒன்றல்ல" என்ற வரிகளுடன் துவங்கும் இத்திரைப்படம், இறுதியில் நம் மனதில் பெரும் பாரத்தை ஏற்படுத்திவிடுகிறது. சாவு நிச்சயிக்கப்பட்டுவிட்ட நிலையிலும் அதன் முன் நின்று புன்னகைக்கும் பெனிகினியின் கதாப்பாத்திரம் உலக சினிமாவில் நிகழ்ந்த அற்புதங்களில் ஒன்று.

1997ஆம் வருடத்தில் வெளியான Life is beautiful பார்வையாளர்களிடத்தில் பலத்த அதிர்வுகளை உருவாக்கியதோடு, அவ்வருடத்தின் ஆஸ்கர் உள்ளிட்ட விருதுகளுடன் பெரும் கவனிப்பை பெற்று நிற்கிறது. ராபர்த்தோ பெனிகினியிடம் திரைப்பட ஆர்வலர் ஆந்த்ரேயன் சில திரைப்பட மாணவர்களுடன் சேர்ந்து மேற்கொண்ட நேர்காணலின் தமிழ் மொழியாக்கம் இது.



**Life is Beautiful திரைப்படத்தைப் பற்றி பேசுவதற்கு முன்பு, உங்களது துவக்க கால கலை உலக வாழ்க்கைக் குறித்தும், நீங்கள் எப்படி ஒரு நகைச்சுவை நடிகனாக உருவானீர்கள் என்பதையும் அறிந்துக்கொள்ள விரும்புகிறேன். நீங்கள் துஸ்கானியில் வளர்ந்தவர், அதோடு என் கணிப்பு தவறில்லை என்றால், சர்க்கஸில் நீங்கள் வேலை செய்திருக்கிறீர்கள். உங்களது அனுபவங்களை பகிர்ந்துக்கொள்ள முடியுமா?**

நன்றி. எனக்கு இவ்விடத்தில் இத்தகைய வாய்ப்பை கொடுத்ததற்காக எனது நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். மிகுந்த நன்றிகள் ஆந்த்ரேயன்! அப்புறம், நீங்கள் நலமாக இருக்கிறீர்களா?

**ஆமாம். நான் நலமாக இருக்கிறேன்.**

நான் இங்கு இருப்பதை மிகவும் விரும்புகிறேன். ஏனெனில், லண்டனில் எனது முதல் கேள்வி பதில் நிகழ்வு இதுதான். அதனால் மிகுதியான பதற்றத்தில் இருக்கிறேன். எனது இருதயம் கொந்தளிப்பில் இருக்கிறது. உணர்வற்ற நிலையில் இருக்கிறேன். இது எனக்கு வழங்கப்பட்டிருக்கும் பரிசைப் போன்றது. உங்கள் எல்லோருக்கும் எனது நன்றிகளை மீண்டுமொருமுறை தெரிவித்துக்கொள்கிறேன்.

**நன்றி.**

ம்ம்ம். இப்போது உங்களது கேள்விக்கு பதிலளிக்க விரும்புகிறேன். ஆனால், உங்களது கேள்வியை மறந்துவிட்டேன்.

**நகைச்சுவை நடிகராக நீங்கள் உருவெடுத்த பயணத்தைப் பற்றி பகிர்ந்துக்கொள்ளுங்கள்.**

நன்றி. இது மிக மிக எளிமையானதொரு கேள்வி! இதுவொரு நல்ல கேள்வியும்கூட! எனக்கு தெரிந்த எனது ஒட்டுமொத்தமான வாழ்க்கையை முதன்மைப்படுத்தும் கேள்வி இது. எனினும், என்னை இங்கு அழைத்ததற்கு எனது ஆழ்மனதில் இருந்து உங்களுக்கு நன்றிகளை தெரிவித்துக்கொள்கிறேன். என் மீது அளவுகடந்த நேசத்தை வெளிப்படுத்தும் மக்களின் எதிரில் நின்றிருப்பது பெரிதும் நெகிழ்வூட்டுகிறது. உங்களுக்கு நன்றிகள். என்னால் உங்களது அதீத அன்பை உணர முடிகிறது. உண்மையாகவே நான் கொடுத்து வைத்தவன். நானும் எனது அன்பை உங்களிடம் பகிர்ந்துகொள்கிறேன். ஒவ்வொருவருக்கும் ஆயிரம் மடங்காகஎனது அன்பை பெரிதுப்படுத்திக் கொடுக்கிறேன். நன்றிகள். இப்போது, நான் எப்படியொரு நகைச்சுவை நடிகராக உருவானேன். அதானே?

ம்ம்ம். துஸ்கானியில் மிக ஏழ்மையான ஒரு குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவன் நான். எனது தாயாரும் தந்தையும் விவசாயத்தில் ஈடுபட்டு வந்தார்கள். எனினும், எனது குழந்தைப் பருவம் எவ்வித புகார்களும் அற்றதாகத்தான் இருந்தது. எனக்கு அமைந்திருக்கின்ற குழந்தைப் பருவத்துக்கு என்றென்றும் நான் நன்றியுடன் இருப்பேன். ஏனெனில், அதில் மகிழ்வும் மனிதநேயமும்தான் நிறைந்திருந்தது.

என் தந்தை எப்போதும் என்னுடன் இருக்கவில்லை. அவர் வேலைத் தேடி வெவ்வேறு ஊர்களுக்கு



பயணித்தபடியே இருந்தார். எனக்கு மூன்று சகோதரிகள் இருந்தார்கள். எங்கள் வீட்டில் இருந்த ஒரேயொரு படுக்கையில் நானும் எனது சகோதரிகளும் தாயாரும் ஒன்றாக உறங்குவோம். எனது குழந்தைப் பருவம் முழுவதும் இந்த நான்கு பெண்களுடன்தான் என் உறக்கத்தை கழித்திருக்கிறேன். அது மிக மிக அற்புதமானது! ஒற்றை படுக்கையில் ஆறு நபர்கள். என்னால் அந்த தினங்களைத் தெளிவுற நினைக்க முடிகிறது. அற்புதமான நினைவுகள். தெளிவுற துலங்கும் அற்புத ஞாபகங்கள்.

அதன்பிறகு, நான் மிகச் சிறியவனாக இருந்தபோதே, நாங்கள் வேறொரு நகரத்திற்கு இடம்பெயர்ந்துச் சென்றோம். அந்த நகரத்தில்தான் முதல்முதலாக பள்ளியில் சேர்ந்தேன். எனது தாயார் மாயாஜால நிபுணர்களையும் மாந்த்ரீகவாதிகளையும் என்னிடம் அழைத்து வந்தார். ஏனெனில், நான் மிகவும் கோரமான உருவம் கொண்டவனாகவும், எளிதில் சகித்துக்கொள்ள இயலாத வகையிலும் இருந்தேன். அதனால், என் மீது சிலருடைய மந்திர பிரயோகங்கள் தேவையென எனது தாயார் கருதியிருந்தார் - இது உண்மைதான் - நினைத்துப் பார்க்கவே அருவருப்பூட்டும் மருந்து ஒன்றை ஓராண்டு காலம் நான் உட்கொள்ள வேண்டும் என்று என் தாயார் என்னிடத்தில் பணித்தார். அதன்பிறகு, மிக நீண்ட உயரம் கொண்ட ஒரு மதபோதகர் எங்கள் வீட்டிற்கு வந்தார். பல்வேறு மருந்து மாத்திரைகளை உண்டு, சோர்வுற்றிருந்த என்னிடம், “ஏதேனும் அசௌகர்யமாக உணருகிறாயா, சிறுவனே?” என்று கேட்டார். அவருக்கு சுவாரஸ்யமான பதிலொன்றைதர வேண்டும் என்பதற்காக நானும், “ஆமாம், நான் நிறைய உணர்வு நிலைகளுக்கு ஆட்பட்டிருக்கிறேன்” என்றேன். உடனே அவர் எனது தாயாரிடம், “இந்த சிறுவன் இப்போது என்னுடன் வரப் போகிறான். அவனை நான் மதம் தொடர்பான பள்ளி ஒன்றில் சேர்க்கப் போகிறேன். இவனை ஒரு மிகச் சிறந்த மதபோதகராக மாற்றுவதே எனது பணி” என்றார். அதனால், வெறும் பனிரெண்டே வயது நிரம்பியிருந்த நான், அப்போதே புளோரென்ஸில் இருந்த மதபோதகருக்கான பள்ளியில் சேர்ந்திருந்தேன்.

புகழ்மிக்க சொற்றொடர் ஒன்று இருக்கிறது. ”சில மனிதர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு அனைத்தும் தெரியும். ஆனால், அதனை மட்டும்தான் அவர்கள் அறிந்து வைத்திருப்பார்கள்”. இந்த சொற்றொடர் எனது மனதில் மிக நீண்ட காலம் தங்கியிருந்தது.

என் வாழ்க்கை இவ்வகையில் பயணித்துக் கொண்டிருக்க, 1964ஆம் வருடத்தில் புளோரென்ஸில் மிகப் பெரிய வெள்ளம் ஒன்று வந்திருந்தது. அந்த காட்சியை நான் துலக்கமாக நினைவில் வைத்திருக்கிறேன். ஏனெனில், அதுவொரு பெலினியின் திரைப்பட காட்சித் துணுக்கைப்போல இருந்தது. எங்கும் நிறைந்திருக்கும் நீர், மனிதர்களின் கதறல்கள்.. அப்போது நான் மதப் பள்ளியில் இருந்து நீரில் நனைந்தபடியே என் வீடு நோக்கி ஓடினேன். அந்த தருணத்தை எனது விடுதலைக்கான ஒரு பயணமாக நான் கருதினேன். மிக விரைவாக ஓடி எனது வீட்டை அடைந்த நான், எனது தாயாரை கட்டி அணைத்துக்கொண்டு, "இதற்கு மேலும் எனக்கு உணர்வதற்கு எதுவுமில்லை" என்றேன்.

அந்த சமயத்தில், எனது தாயார் மேலும் வறுமையில் பீடிக்கப்பட்டிருந்தார். குதிரைகள் ஒருபுறம் பிணைக்கப்பட்டிருந்த அற்புதமான அறையில் நாங்கள் தங்கியிருந்தோம்.

குதிரைக் கொட்டகை?

இல்லை. மிகத் துல்லியமாக அதுவொரு குதிரைக் கொட்டகை இல்லை. நாங்கள் குதிரைகளுடன் சேர்ந்து உறங்கவில்லை. எங்களது அறை ஒரு குதிரைக் கொட்டகையின் மிக அண்மையில் இருந்தது. எங்களது அறையின் ஜன்னல் வழியே எங்களால் குதிரைக் கொட்டகையை பார்க்க முடிகின்ற அளவில் அவ்வறை இருந்தது. எனினும், அவ்வறையை இன்னமும் நான் நினைவு வைத்திருக்க காரணம், அவ்வறை மிகமிக குளிர்ச்சி மிகுந்ததாக இருந்தது. என்னால் அந்த குளுமையை மிகத் துலக்கமாக நினைவுக்கூர முடிகிறது.

அதன்பிறகு, ட்ரோலின் என்றொரு சர்க்கஸ் இருந்தது. அதனுள் சென்று காட்சிகளை பார்க்கும் அளவுக்கு என்னிடம் அப்போது பணம் இல்லை. என்றாலும், மாலைவேளையில் மெல்ல எவருக்கும் தெரியாமல் அந்த சர்க்கஸின் உள்ளே ஊடுருவி செல்வேன். மாயாஜால கலைஞர்களையும் கோமாளிகளையும் விலங்கையும் அதோடு, அந்தரத்தில் தொங்கும் கலைஞர்களையும் பார்ப்பேன். அது மிக மிகச் சிறியதொரு சர்க்கஸ். அவர்களிடம் ஒரேயொரு சிங்கம் மட்டும்தான் இருந்தது. அந்த மாயாஜால வித்தைக்காரர் தினமும் மாலையில் வந்து சர்க்கஸை இலவசமாக பார்க்கும்படி என்னிடத்தில் தெரிவித்தார். இறுதியில், ஒருநாள் என் அம்மாவிடம், "இந்த சிறுவனை நான் வைத்துக்கொள்கிறேன். எனக்கொரு உதவியாளர் தேவை" என்றார். எனக்கு அது மிகப்பெரிய சந்தோஷத்தைக் கொடுத்தது. என்னை விடவும் எனது அம்மாவுக்கு இந்த அழைப்பு பெரும் மகிழ்வைக் கொடுத்தது. ஏனெனில், உணவு பங்கீட்டில் ஒரு தலை இதனால் குறைந்துவிடும் அல்லவா? எனது அம்மா முகம் மலர்ந்து, "போ, ராபர்த்தோ, போய் வா" என்றாள்.

நான் முழு நிறைவுடன் இருந்தேன் - முழுமையாக. அதோடு, அந்த வித்தைகள் மிக எளிமையானதாகவும் இருந்தன. ஒவ்வொரு மாலையும் மாயாஜால வித்தைக்காரரின் உதவியாளனாக செல்லும் நான், அவரது சொற்களால் வசியம் செய்யப்பட்டதைப்போல நடந்துக்கொள்ள வேண்டும். அவர் சொல்லுவார், "நீ இப்போது சஹாரா பாலை நிலத்தில் இருக்கிறாய். இங்கு வெப்பம் மிக கடுமையானதாக இருக்கிறது". உடனடியாக எனது உடைகளை ஒவ்வொன்றாக கழற்றும் வேலையில் ஈடுபடுவேன். மேலாடைகளை அகற்றிவிட்டு, உள்ளாடைகளை நெருங்கும் சமயத்தில் அவர் மீண்டும் என்னிடத்தில், "ஓஹ்! இப்போது நீ வடதுருவ பகுதிக்குள் வந்துவிட்டாய்" என்பார். உடனடியாக நான் அவைகளை மீண்டும் அணிந்துகொள்ள துவங்குவேன்.

இது மிகவும் முட்டாள்தனமான செய்கைதான் என்றாலும், அந்த காலத்தில் மக்கள் மத்தியில் மிக பிரபலமாக கொண்டாடப்பட்ட நிகழ்வுகளில் ஒன்றாக இது இருந்தது. மக்கள் இந்த வேடிக்கையை பெரிதும் விரும்பினார்கள். கூடுதலாக, நெருப்பை வைத்து செய்யும் வேடிக்கை ஒன்றிலும் நான் ஈடுபட்டேன். விநோதமான பொடியையும் கிரீமையும் உபயோகித்து எனது கரங்களில் தீ மூட்டினால், எனது கரங்களில் தீப் பற்றிக்கொள்ளாது. ஆனால், ஒருமுறை அந்த மாயாஜால வித்தைக்காரர் இந்த செய்கையை தவறாக பிரயோகித்ததில் எனது கைகளில் உண்மையாக தீ படர்ந்துவிட்டது. இப்போதுக்கூட அந்த நெருப்பு என் கையில் உண்டாக்கிய தழும்புகள் இருக்கின்றன. மீண்டுமொருமுறை தப்பித்தல் நிகழ்ந்தது. நான் சர்க்கஸில் இருந்தும் விடுபட்டேன். அப்போது எனது அம்மா மீண்டும், "இனியும் இதனை தொடராதே! நிறுத்து!" என்றார்.

முதலில் நீரினால் மீட்கப்பட்ட நான், இந்த முறை நெருப்பினால் காப்பாற்றப்பட்டேன். அப்போது பிப்ரவரி அல்லது மார்ச் மாதம் என்று நினைக்கிறேன். பெண்கள் பள்ளியில் ஆசிரியராக இருந்த மற்றுமொரு மதகுருவை அத்தருணத்தில் சந்தித்தேன் - இத்தாலியில் கத்தோலிக்க மதகுருமார்கள் எங்கும் நிறைந்திருந்தார்கள் - அவர் செயலக பள்ளியில் சேர விண்ணப்பிக்குமாறு எனக்கு ஆலோசனை வழங்கினார். அதனால், அந்த பள்ளியில் சேருவதென்று முடிவு செய்தேன். எனது வகுப்பறையில் மொத்தம் 40 பெண்கள் இருந்தனர். அவ்வகுப்பறையில் நான் ஒருவன் மட்டுமே ஆண். அது மிக மிகச் சிறப்பானது அல்லவா! ஆனாலும், எனக்கு ரொம்பவும் கூச்சமாக இருந்தது. 40 பெண்களும் நானும். இதுவும் உண்மையில் பெலினியின் மற்றொரு காட்சித் துணுக்கைப்போலவே இருந்தது. அதுவொரு அற்புத நினைவலைகளை எனக்கு கொடுத்த சிறுவெளியாக எனக்குள் புதைந்திருக்கிறது. அந்த தினங்களில் அனைத்துமே மிக மிக அற்புதமானவை.

எனது தந்தை துஸ்கான் மரபின் மீது பெரும் பக்தி கொண்டிருந்தார். அதனால், அரியோஸ்டோவை போலவோ அல்லது ஸ்பென்சாரை போலவோ நானும் எனது கவித் திறனை வளர்த்தெடுக்க வேண்டும் என விரும்பினார். பார்வையாளர்கள் நமக்கு கொடுக்கின்ற கதாப்பாத்திரத்தின் தன்மை அறிந்து அதற்கேற்றாற்போல சொற்களின் சந்த நயத்தை கட்டமைப்பதும், அதனை மெல்ல மெல்ல மெருகூட்டியபடியே இருப்பதும் எனது தந்தைக்கு மிகவும் பிடித்திருந்தது. இவைகளின் மீதான எனது தந்தையின் காதல் அளப்பரியது. அதனால், இதில் ஈடுபாடு செலுத்தும்படி தொடர்ச்சியாக என்னை வலியுறுத்தியபடியே இருந்தார். அவருக்கு இதுபோன்ற



புதிரான கலைகளில் எல்லாம்தான் ஆர்வம் அதிகம். அதனால், அதில் நானும் சேர்ந்துக்கொண்டேன். எனினும், எனக்கு அடுத்ததாக அந்த குழுவில் இருந்தவர்களில் இளமையானவருக்கு வயது 75! அந்தளவிற்கு அக்கலை மிக மிகப் பழமையானது.

இருந்தபோதிலும், நான் அதனையும் முயற்சித்துப் பார்த்தேன். பல புதிய விஷயங்கள் எனக்கு அறிமுகமாயின. அருவருக்கத்தக்க வார்த்தைகள் மற்றும் மிக நவீன வார்த்தைகள் எனக்கு கிடைத்தன. அந்த குழுவினரும் என்னை மிகவும் விரும்பினார்கள். ஏனெனில், அது முற்றிலும் புதியதாகவும் செவ்வியல் பண்புகளை கொண்டதாகவும் இருந்தது. நாங்கள் அதனை கவிதையில் நிகழும் சண்டை என்று சொல்வோம். மிகுந்த சுவாரஸ்யமிக்க கலை அது. எங்கள் குழுவினருடன் வெளியூர் சென்றிருந்தபோது ரோமில் இருந்து ஒரு இயக்குனர் வந்திருந்தார் - நல்லவேளை அவர் இப்போது உயிருடன் இல்லை - அவர் என்னை அதிகம் புகழ் அடைந்திராத, அதே சமயத்தில் மிகுதியான திறன்கொண்ட நாடக குழுவில் இணைத்து செயல்பட சொன்னார். இது நிகழ்ந்தது 1970இன் துவக்கத்தில் என்று நினைக்கிறேன். 70 அல்லது 71.

அந்த இயக்குனர் என்னை, ரோமில் அப்போது புதிதான சிந்தனைகளுடன் நாடகவெளியில் பெரும் பாய்ச்சலை நிகழ்த்திக் கொண்டிருந்த நாடகக் குழுவில் சேர்ந்துக்கொள்ளும்படி உத்வேகமூட்டினார். நானும் சேர்ந்துக்கொண்டேன். ஆங். எனது வாழ்க்கையின் மிக மிக அற்புதமான அனுபவங்களில் அவையும் குறிப்பிடத்தகுந்தவை. ஷேக்ஸ்பியர் எழுதிய ஹேம்லெட்டில் ஒபிலியா வாத்தாக நடிக்கும் பகுதியை அல்லது ரோமியோ ஜூலியட்டில் ரோமியோ பாட்டிலாக நடிக்கும் பகுதியை மேடையில் அரங்கேற்றினோம். எங்களது கற்பனைகளில் பலவும் வேடிக்கையானவை என்றாலும், அதியற்புதமான தலைசிறந்த சில உருவாக்கங்களும் அதில் இருந்தது.

அதன்பிறகு, மிகச் சிறந்த இயக்குனரான குசப்பி பெர்ட்டோலூசியை (Giuseppi Bertolucci) சந்திக்கும் வாய்ப்பு எனக்கு கிடைத்தது. எனது சிறிய கிராமத்து நினைவுகளில் இருந்து அனைத்தையும் அவரிடம் நான் பகிர்ந்துக்கொண்டேன். அதனை மேடைகளில் நிகழ்த்தப்படும் சொற்பொழிவைப் போல பேசி அரங்கேற்றம் செய்தோம். இத்தாலியில் அந்த நிகழ்ச்சி மிகப் பிரபலமாக பேசப்பட்டது. எங்கள் நிகழ்வை காண்பதற்காக வெகு தொலைவில் இருந்தெல்லாம் மக்கள் திரண்டிருந்தார்கள். இதன் மூலமாக, The Building where I love you என்றொரு திரைப்படத்துக்கு எழுதும் வாய்ப்பும் எங்களுக்கு கிடைத்தது. இப்படித்தான் நான் மெல்ல மெல்ல திரையுலகுக்கு வந்து சேர்ந்தேன். இப்போது உங்களது முதல் கேள்விக்கான பதில் கிடைத்துவிட்டது என்று நம்புகிறேன்.

**பெலினியை பற்றி பலமுறை நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஆனால் 1979இல்தான் அவருடன் சேர்ந்து வேலை செய்தீர்கள் இல்லையா? அந்த அனுபவத்தைப் பகிர்ந்து கொள்ள முடியுமா?**

பெலினி இயற்கைக்கு சொந்தமானவர். அவரது மரணத்திற்கு பின்பாக, இத்தாலிய செய்தித்தாள் ஒன்றில் அவரைப் பற்றி நான் எழுதியபோது, பெலினி இல்லாத உலகம் என்பது, ஆலிவ் எண்ணெய் இல்லாத உலகத்தைப் போன்றது என்று குறிப்பிட்டிருந்தேன். அதாவது, முழுமையாக இயற்கையால் நிரம்பிய ஒன்று, இயற்கைக்கு உரிய ஒன்று. தனிப்பட்ட வகையில், பெலினி எனக்கு தர்பூசணி பழத்தைப் போன்றவர். தர்பூசணி பழம் இன்னும் இருக்கிறது. அதற்கு மரணம் இல்லை. அதனால் மரணடைய முடியாது. பெலினியும் புனுவலும்தான் என் வாழ்க்கையை மாற்றியவர்கள். எனது மிக விருப்பமான இயக்குனர்கள் அவர்கள்தான்.



திரைப்படங்கள் என்பது கனவின் தன்மையிலானது என்கின்ற கூற்று உண்மையானதுதான். பெலினியும் புனுவலும் கனவு நிலையில்தான் திரைப்படங்களை படம்பிடித்துக் கொண்டிருந்தார்கள். இயற்கை அவர்களுக்கு என்ன கொடையை அளித்ததென்று எனக்கு தெரியவில்லை. அவர்கள் கனவுகளுக்குள் அமிழ்ந்திருந்தபடியே, கனவுநிலையின் சாயைகளை தங்களின் திரைப்படங்களில் படரவிட்டிருந்தார்கள். அவர்களது திரைப்படங்களை பார்த்ததற்கு பிறகு, இந்த உலகத்தின் மீதான எனது கண்ணோட்டம் முற்றிலுமாக மாறியிருக்கிறது. அதற்காக அவர்களுக்கு நான் பெரிதும் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன்.

பெலினியுடன் சேர்ந்து The Voice of the Moon திரைப்படத்தில் வேலை செய்து கொண்டிருந்தபோது அவரைக் கூர்ந்து அவதானித்தேன். அவரிடம் ஏதோவொரு வசீகரம் மிகுந்திருந்தது. ஒரு தாயின் அணுக்கத்தை என்னால் அவரிடத்தில் உணர முடிந்தது. ஓக் மரத்தின் அருகில் இருப்பதைப்போல அப்போது உணர்ந்தேன். படம்பிடித்தலின்போது காட்சிகளை மெல்ல அவர் மெருகூட்டியபடியே இருப்பார் என்றொரு கட்டுக்கதை அவர் தொடர்பாக உலவி வருகிறது. அது உண்மை இல்லை என்றே கருதுகிறேன். படப்பிடிப்பு துவங்குவதற்கு முன்பாக, எல்லோரும் பேரமைதியில் ஆழ்ந்திருப்பார்கள். ஏனெனில், அவர்களுக்கு எதிரில் மாஸ்ட்ரோ தயாராகிக் கொண்டிருக்கிறார். ஒரு சிறு பூச்சிக்கூட சப்தம் எழுப்பாது. ஆனால், அவர் "ஆக்ஷன்" என்று உரக்கச் சொல்லிவிட்டாரென்றால் உடனடியாக அவ்விடமே பரபரவென இயக்கம் கொண்டுவிடும். எல்லோரும் அலறத் துவங்கிவிடுவார்கள். நடிகர்கள் இந்த பெரும் குழப்பச் சூழலில் நடித்துக்கொண்டிருப்பார்கள். நீங்கள் அந்த திரைப்படத்துடன் புணர்ச்சியில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைப்போல உணருவீர்கள்.

இந்த அணுகுமுறை எனக்கு முற்றிலும் நேரெதிரானது. அதன்பிறகு அவர் அனைத்தையும் ஒலிச் சேர்க்கையின்போது (Dubbing) மாற்றிவிடுவார். அவருக்கு ஒலிச் சேர்க்கையின் மீது பெரும் விருப்பம் இருந்தது. ஒரு காட்சியில் நான், "குடிக்க கொஞ்சம் நீர் கிடைக்குமா?" என்று கேட்டிருப்பேன். ஆனால், பெலினி அக்காட்சியின் குரல் பதிவின்போது, இப்போது நீ, "உன்னை மிக அதிகமாக காதலிக்கிறேன்" என்று சொல்ல வேண்டும் என்பார். பெலினி அனைத்தையும் மாற்ற விரும்பினார். ஒரு மாயாஜால வித்தைக்காரரைப்போல அவரது செயல்பாடுகள் இருந்தன. எனது வாழ்க்கையில், இரண்டாவது முறையாக மீண்டும் நான் மாயாஜால வித்தைக்காரரின் உதவியாளனாக சேர்ந்திருந்தேன். பெலினி என் ஒட்டுமொத்த வாழ்க்கையையே மாற்றிவிட்டார்.

**அவர் உங்களை பாதித்திருக்கிறாரா? அவரிடம் பணியாற்றியதில் இருந்து சில வருடங்களிலேயே உங்களது முதல் திரைப்படத்தை இயக்கி இருக்கிறீர்கள். பெலினியுடன் சேர்ந்து வேலை செய்தது திரைப்படம் இயக்கும் எண்ணத்தை உங்களுக்கு உண்டாக்கியதா? அல்லது துவக்கத்தில் இருந்தே நீங்கள் இயக்குனராக உருவாக வேண்டுமென்று விரும்பினீர்களா?**

பெலினியின் திரைப்படம் ஒன்றை முதல் முறையாக

பார்த்தபோது? ஆம்! பெலினியின் திரைப்படத்தை முதல் முதலாக பார்த்துவிட்டு, திரையரங்கில் இருந்து வெளியேறிய உடன் ஒரு வழக்கறிஞராக எனது வாழ்க்கையை தொடருவதுதான் மிகச் சரியானது என்றே கருதினேன். ஏனெனில், நான் எனக்குள்ளாக சொல்லிக்கொண்டேன்: இதுப்போல அழகான ஒன்றை ஒருபோதும் உருவாக்கிட முடியாது. இல்லை. அது என்னை வளர்த்தெடுத்துக்கொள்ள பெரிதும் உதவியது. பெலினி ஒரு கொடையாளர். பெலினி போன்ற மனிதர்கள் இல்லாத உலகம் எப்படி இருக்கும்?

20 வருடங்களாக பெலினியை எனக்கு தெரியும். ஒவ்வொரு முறை ஒரு புதிய திரைப்படத்தை அவர் இயக்கி முடித்ததும், என்னை தொலைபேசியில் அழைத்துவிடுவார். ”ராபர்த்தோ, உன்னை வைத்து அடுத்த திரைப்படத்தை இயக்க விரும்புகிறேன். சில ஒத்திகைகளை பார்க்க வேண்டும். தயாராய் இரு” என்று சொல்வார். அதன்பிறகு, என்னை ஒரு பெண்போல உடை அணியச் செய்து, “ஏதாவது நடித்துக் காட்டு” என்பார். பின்னர் உனக்கு என்ன வயது ஆகிறது என்று கேட்பார். “எனக்கு 30 ஆகிறது” என்று பதிலளித்தால், ”ஓஹ், என்னை மன்னித்துவிடு, எனக்கு 70 வயதுடைய நடிகர்தான் தேவை. மீண்டும் மன்னிப்பு கேட்கிறேன். எனக்கு ஒரு பெண்தான் தேவைப்படுகிறாள். எனக்கு இவ்வளவு நேரமும் ஒத்துழைப்பு கொடுத்ததற்கு நன்றிகள்” என்பார். கடந்த 20 வருடங்களாக அவருக்காக நான் ஒத்திகைகளை செய்துக்கொண்டிருக்கிறேன். எனினும், இறுதியில் அவர், “எனக்கொரு நாய்தான் வேண்டும் அல்லது பெண்தான் வேண்டும் அல்லது முதியவர்தான் வேண்டும்” என்று சொல்லிவிடுவார்.

அவருக்கு பினாச்சியோவை (Pinocchio) படமாக்க வேண்டுமென்று பெரும் விருப்பம் இருந்தது. தெய்வாதீன நகைச்சுவைத்தன்மை கொண்ட அதனை திரைப்படமாக உருவாக்க விரும்பியும் அவர் கைவிட்டுவிட்டார். எனது திரைப்பட வாழ்க்கையில் இரண்டு மிகச் சிறந்த கதைகளை விவாத அளவிலேயே நின்றுப்போய்விட்டது. பெலினியுடன் சேர்ந்து பினாச்சியோவை உருவாக்குவது, மற்றொன்று மைக்கேலாஞ்சலோ அந்தோனியோனியுடன் சேர்ந்து புனித பிரான்ஸிஸ் (Saint Francis) பற்றிய திரைப்பட முயற்சி. அந்தோனியோனி இத்தாலிய திரைப்பட படைப்பாளிகளுக்கு ஒரு ஹோமரை போன்றவர். புனித பிரான்ஸிஸ் கடவுளின் முட்டாள். அவனால் சாவின் எதிரில் நின்றுக்கூட புன்னகைக்க முடியும். உலகத்தின் மிக அதிக வலியை சுமந்திருக்கும் தருணத்திலும்கூட அவனால் சிரிக்க முடியும். புனித பிரான்ஸும் என்னைப் பொறுத்தவரையில் பினாச்சியோவைப்போல அதிக முட்டாள்தனங்கள் நிறைந்த கோமாளிதான். அதனால்தான் நாங்கள் அதனை எழுதத் துவங்கினோம். அதை எப்படி எழுதுவது என்பதில் இருவருக்கும் இடையில் சிறிய அளவில் கருத்து வேறுபாடு உருவாகியது. எங்கள் இருவரது அணுகுமுறையும் முற்றிலும் எதிரெதிராக இருந்தது. அதோடு அந்தோனியோனியின் உடல்நிலையும் அப்போது சீராக இல்லை என்பதால், அந்த திரைப்பட முயற்சியை எங்களால் முன்செலுத்த முடியவில்லை. முற்றிலும் நேரெதிரான அணுகுமுறையை கொண்டவர்கள்தான் என்றாலும், பெலினியைப்போலவே அந்தோனியோனியும் மிகப்பெரும் அறிவாளி என்பதில் எனக்கு மாற்று கருத்தில்லை.

**Life is Beautiful திரைப்படத்தைப் பற்றிய உரையாடலை துவங்குவதற்கு முன்பாக, நகைச்சுவை கலைஞர்களை பற்றியும், பிற நகைச்சுவை நடிகர்கள் உங்களின் மீது செலுத்திய தாக்கத்தைப் பற்றியும் பேச விரும்புகிறேன். சார்லி சாப்ளினை பற்றி ஒரு நேர்காணலில் நீங்கள் குறிப்பிட்டிருந்ததைப் படித்திருக்கிறேன். அதில், நீங்கள் சார்லி சாப்ளினின் பின்புறத்தைப் பற்றி பேசியிருந்தீர்கள். அதைப் பற்றியும் தெரிந்துக்கொள்ள விழைகிறேன். கூடுதலாக, உங்களது நகைச்சுவை பாவனைகளின் வெளிப்பாட்டு முறைகளில் எவரின் சாயல் அதீதமாக படர்ந்துள்ளதாக நீங்கள் கருதுகிறீர்கள்?**

திரைப்படங்கள் மீதான எனது முதல் ஞாபகங்கள் எங்களது சிறிய கிராமத்தில் வெள்ளம் புகுந்த தினத்திற்கு பிற்பாடு துவங்குகிறது. நான் எனது இரண்டு சகோதரிகளுடன் அப்போது இருந்தேன். ஆனால், திரைப்படங்களை பார்ப்பதற்கு தேவையான பணம் எங்களிடம் இல்லாதிருந்தது. அதனால், நாங்கள் வெளியிலேயே பல மணி நேரமாக காத்திருந்தோம். இறுதியில், எங்களது கன்னத்தில் ஆளுக்கு ஒரு அரை கொடுத்துவிட்டு, கடைசி பத்து நிமிட காட்சியை மட்டும் பார்க்க உள்ளே அனுமதித்தார்கள்.

நான் பார்த்த முதல் திரைப்படம் - அந்த திரைப்படம் என்னை பாதித்தது என்று என்னால் சொல்ல முடியாது - பென் ஹர். திரையரங்குக்கு வெளியில் திரையிடப்பட்டிருந்த அதனை சோளக்கதிர்கள் அசைந்தாடிக்கொண்டிருந்த ஒரு சிறிய வெளியில் அமர்ந்துப் பார்த்தோம். அதுவும் அந்த திரைப்படம் இறுதியில் இருந்து முதல் காட்சியை நோக்கியபடி ஓடிக்கொண்டிருந்தது. எனது நினைவில் எப்போதுமே Ben Hur என்பது Ruh Nebதான்! சார்ல்டன் ஹெஸ்டன் எனது மிக விருப்பமான நடிகர். அதோடு வில்லியம் வைல்டர்! ஆஹ்! எத்தனை அற்புதமான இயக்குனர் அவர்!

அதனால் நான் இரண்டாவதாக பார்த்த திரைப்படம்தான் உண்மையில் எனது முதலாவது திரையரங்க அனுபவம். அது மிகவும் மெலோடிரமட்டிக்காக உருவாக்கப்பட்டிருந்தது. அந்த திரைப்படத்தைப் பார்த்துவிட்டு நான் கதறி கதறி அழுதேன்! டக்ளஸ் சிர்க் இயக்கிய The imitation of life எனும் அந்த திரைப்படத்தைப் பார்த்து ஒட்டுமொத்த பார்வையாளர்களும் உணர்ச்சிவயப்பட்டு அடக்க முடியாமல் அழுது தீர்த்தார்கள். வீட்டில் அந்த திரைப்படத்தின் கதையை எனது அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருக்கையில், அம்மாவும் நெகிழ்வுற்று, “போதும்!” என்றார்.

1978இல் நான் எனது முதல் திரைப்படத்தை உருவாக்கியிருந்தபோதுதான், எனது அம்மாவும் அப்பாவும் முதல்முறையாக திரையரங்கத்திற்கு வந்தார்கள். அப்போது அவர்களுக்கு 60 வயது ஆகியிருந்தது. நுழைவுச் சீட்டை பெற்றுக்கொண்டு, மாலை நான்கு மணியளவில் அரங்கத்துக்குள்

நுழைந்த அவர்கள் நள்ளிரவு வரையில் உள்ளேயே அமர்ந்திருந்தார்கள். பொதுவாக நடன நிகழ்வுகளுக்கு சென்று, அரங்கம் மூடப்படுகின்ற வரையில் அமர்ந்திருக்கும் வழக்கமுடையவர்கள் அவர்கள் என்பதால், திரையரங்கத்தையும் அவ்வாறே கருதி அவர்கள் உள்ளிருந்துவிட்டார்கள். மொத்தமாக நான்கு முறை எனது திரைப்படத்தைத் தொடர்ச்சியாக அவர்கள் பார்த்திருந்தார்கள். அவர்களுக்கு எனது திரைப்படம் மிகவும் பிடித்துவிட்டது.

அதன்பிறகு செவ்வியல் ஆக்கங்களின் அறிமுகம் எனக்கு கிடைத்தது. நவீன நகைச்சுவையின் சாரம்சங்கள் ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் - குறிப்பாக அவரது துவக்க கால படைப்புகளில் - இருப்பதை கண்டுணர்ந்தேன்.

அதோடு நான் டோட்டோவையும் (Toto) நேசித்தேன் (நேப்பிள்ஸை சேர்ந்த கோமாளி). ஏனெனில், என்னை எப்போதும் அச்சுறுத்திய விசித்திரமான திரைப்படம் அது. சர்க்கஸில் எனக்கு உண்டான அனுபவங்களின் மூலமாக, கோமாளி என்பவர் எப்போதுமே ஒரு அரசரைப் போன்றவர் என்பதை உணர்ந்திருக்கிறேன். ஒரு சிங்கமோ அல்லது ஒரு மாயாஜால வித்தகரோதான் உச்சநிலையில் இருப்பவர் என்றே கருதினேன். ஆனால், கோமாளிதான் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவர். அவருக்கு நண்பர்களை வென்றெடுக்க தெரிந்திருக்க வேண்டும். இசைக் கருவிகளை வாசிக்க தெரிந்திருக்க வேண்டும். அதோடு, நகைப்பூட்டும் உடல் அசைவுகளையும் அறிந்திருக்க வேண்டும்.

ஒரு கோமாளியின் குணவியல்புகளை, முக்கியத்துவத்தை கொஞ்சம் கொஞ்சமாக புரிந்துகொண்டேன். ஆனால், அவர்களது முக அலங்காரம் எப்போதும் என்னை பயமுறுத்தவே செய்திருக்கிறது. உங்களுக்கு மிக நெருக்கமாக வந்து ஒரு கோமாளி புன்னகைக்கும்போது, அந்த சிரிப்பு பச்சை நிறத்தில் ஒளிர்ந்துக்கொண்டிருக்கும். இது என்னை பெரிதும் கவர்ந்துவிட்டது. அதனால், முதல் முறையாக டோட்டோவை பார்த்தபோது நான் பயந்துவிட்டேன். டோட்டோ நேப்பிள்ஸை சேர்ந்த கோமாளி. அதோடு, நேப்பிள்ஸில் நானொரு தீர்க்கத்தைப் பார்த்தேன். டோட்டோவின் தோள்பட்டைக்கு பின்னால், அலங்காரத்துக்கு அடியில் மரணத்தை குறிக்கும் முகமுடி ஒன்றை என்னால் பார்க்க முடிந்தது. அதனால்தான், அவன் வலிமையானவனாக இருக்கிறான். அதோடு, அவன் பிரத்யேகமான குணவியல்புகளை கொண்டவன். அதனால்தான் அவனைப் பார்த்து நாம் பயப்படுகிறோம். அவன் செய்வது நகைச்சுவையோ அல்லது முரணியக்கமோ அல்லது ஸ்லாப்ஸ்டிக் அசைவுகளோ அல்லது தருணங்களின் நகைச்சுவையோ அல்ல. டோட்டோ ஒருவகையில் ஆபாசங்கள் நிறைந்த கோமாளி. இங்கு பாலுணர்வெழுப்புதல் என்பதுதான் நகைச்சுவையாகிறது.

நீங்கள் சாப்ளினையோ அல்லது பஸ்டர் கீட்டனையோ அல்லது லாரலையோ பார்த்தீர்கள் என்றால், அவர்கள் மிக அரிதாக தங்களது முகங்களுக்கு அண்மைக் காட்சிகளை வைத்திருப்பார்கள். ஒரு அசலான கோமாளியை இவ்வகையில் அண்மைக் காட்சியில் பதிவு செய்தீர்கள் என்றால், அவர்களது முகமுடி உங்களை அதீத பதற்றத்துக்கு உள்ளாக்கிவிடும். ஆனால், எதனால் சார்லி சாப்ளினின் பின்புறத்தை குறிப்பிட்டேன் என்றால், ஒரு கோமாளி மிக அரிதாகவே தனது முகத்தை அண்மையில் பதிவு செய்வார். அவரது நகைச்சுவை என்பது உடலின் பின்புறத்தை வேடிக்கையாக அசைப்பதிலும், நகர்த்துவதிலும் இருந்துதான் துவங்கும். உடல்தான் இங்கு நகைச்சுவையின் வெளிப்பாட்டு களமாக அசைகிறது. கீழ் நோக்கி போகப் போக நகைச்சுவையின் விஸ்தாரம் பெருகியபடியே இருக்கிறது. உடலை தாழ்வு நிலையில் இருந்து பதிவாக்கும்போது, கலை ஒருவித உன்னத நிலையை அடைகிறது.

நெப்பொலியனின் டைரியில் படித்த விஷயம் ஒன்று நினைவுக்கு வருகிறது. போர்க் களத்தில் இருந்து ஒரு தளபதி அவரைப் பார்க்க வருகிறார். நெப்பொலியனிடம் பகிர்ந்துக்கொள்ள கொடூரமான துயரச் செய்தி ஒன்று அவரிடம் இருக்கிறது. போரில் தோல்வியை தழுவியது தொடர்பான தகவல் அது. அவரது குழப்பத்தை உணரும் நெப்பொலியன், முதலில் அவரை அமரச் சொல்கிறார். அதனால், அந்த தளபதி தனது போர் கருவிகளுடன் குழப்பத்துடன் அவருக்கு எதிரில் அமருகிறார். நெப்பொலியன் அவரது உடலின் இயக்கத்தை விவரித்திருக்கும் முறையைப் பார்த்ததும், அதில் ஒரு நகைச்சுவை இருப்பதை என்னால் உணர முடிந்தது. அந்த தளபதியின் உடலசைவுகளில் நகைச்சுவை இயல்பாக உருவெடுக்கிறது. இதனை என்னால் புரிந்துக்கொள்ள முடிகிறது. நெப்பொலியன் போரின் தோல்வியை எதிர்கொள்ள தன்னளவில் தயாராகிறார்.

**இப்போது Life is beautiful திரைப்படத்தைப் பற்றி உரையாடுவோம். இயக்குனராக இது உங்களுக்கு ஐந்தாவது திரைப்படம். நீங்கள் நடித்து இயக்கிய மற்ற அனைத்து திரைப்படங்களில் இருந்து இது முற்றிலும் வேறுப்பட்டிருக்கிறது. இது மிகத் தீவிரமான நிகழ்வு ஒன்றை கதைக்களமாக கொண்டிருக்கிறது. இதுவொரு நகைச்சுவை படமும்கூட அல்லது இந்த திரைப்படத்தில் நகைச்சுவையும் இருக்கிறது. உங்களது திரையுலக பயணத்தில் இந்த தருணத்தில் இப்படியான படுகொலைகள் குறித்த திரைப்படம் ஒன்றை இயக்க வேண்டும் என்கின்ற உந்துதல் எவ்வாறு உருவாகிறது?**

யூதப் படுகொலை நிகழ்வு எல்லோருக்கும் பொதுவானது என்றே கருதுகிறேன். நீங்கள் அது குறித்த தகவல்களை வாசித்து முடித்ததும் முற்றிலும் வேறான மனிதராக மாறியிருப்பீர்கள். இந்த திரைப்படத்துக்கான உந்துதல் எந்தவொரு புத்தகத்தில் இருந்தும் உருவாகவில்லை. தனிப்பட்ட வகையில் எனக்கு தெரிந்திருந்த பிரிமோ லிவி (Primo Levi) தெரிவித்த தகவல்களை கொண்டும் உருவாக்கப்படவில்லை. ஏனெனில், அவரிடம் மிகக் குறைவாகவே நான் பேசியிருக்கிறேன். பாசிஸம் பிறப்பெடுத்த இத்தாலிக்கு, பேரழிவு தருணங்களுடன் ஒருவிதமான தொடர்பு எப்போதுமிருக்கிறது. ஆனால், ஒரு திருப்புமுனையாக இந்த பேரழிவு தருணங்கள் ஒட்டுமொத்த உலகத்தையும் பாதித்து, மனிதநேயத்தை ஆழமாக வலியுறுத்தும் ஒரு நிகழ்வாக நிலைத்துவிட்டது.

நான் எனது திரைக்கதை ஆசிரியருடன் அமர்ந்து



அடுத்த திரைப்படத்துக்கான கதைக் குறித்து யோசித்துக் கொண்டிருந்தேன். ஒரு புதிய திரைப்படத்துக்கான தீவிர யோசனை என்பது மெலொடிக்களைக் கோர்ப்பதற்கு நிகரானது. இந்தவகையிலான மனநிலையில் இருக்கும்போது பல்வேறு யோசனைகள் இயல்பாகவே உங்களுக்கு தோன்றும். "இப்போது ஏதாவது புதிதாக செய்தாக வேண்டும். திரையுலக பயணத்தை மேலும் தீவிரப்படுத்தும் வகையில் ஏதேனும் செய்தாக வேண்டும்" என்றெல்லாம் நான் யோசிக்கவில்லை. அடுத்த திரைப்படம் குறித்து மட்டுமே வெகு நிதானமாக சிந்தித்துக் கொண்டிருந்தேன். சில நேரங்களில் எனது திரைக்கதை ஆசிரியருடன் அமர்ந்துக்கொண்டு, பழங்கால ரோம் நாட்டை சேர்ந்தவனைப் போலவோ ரஷ்ய பெண்மணியைப் போலவோ அல்லது ஒரு ஸ்பானிஷ் நாயைப் போலவோ மனதில் தோன்றும் வசனங்களை தொடர்ச்சியாக உரையாடிக் கொண்டிருப்பேன். அத்தகையதொரு தருணத்தில்தான் மிக தற்செயலாக மென்மையானதும், நகைச்சுவை உணர்வுமிக்கதுமான ஒரு திரைப்படத்துக்கான கரு எங்களுக்கு கிடைத்திருந்தது.

பின்னர் மெல்ல மெல்ல அதனை செறிவுப்படுத்தியபடியே இருந்தேன். அப்போது முற்றிலும் எதிர்பாராத வகையில் யூத வதை முகாமில் சிக்கியிருக்கும் ஒரு மனிதனைப் போல என்னை உருவகப்படுத்தி, அந்த நிலையில் அவனது மனதில் உதிக்கும் வார்த்தைகளை உச்சரித்துக் கொண்டிருந்தேன். ஆனால், நானொரு நகைச்சுவை நடிகன் என்பதால், உலகத்தின் மிகக் கொடூரமான சூழல் நிலவும் அந்த கொலைவெளியில் நின்றிருக்கும் நான், அதன் இயல்புக்கு முற்றிலும் மாறாக, அதனையொரு அழகான இடமாக நினைத்துக்கொள்ள முயற்சித்தேன். நான் ஒரு சிறுவனிடம் பேசுகிறேன், "நீ மகிழ்வாக இருக்கிறாயா? உனது தந்தையைப் பார்த்தாயா? அவர் உன்னைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்கிறார். ஆஹ்! இது அற்புதமானது!". இந்த எண்ணம் என்னை பெரிதும் நெகிழ்வூட்டியது.

எனது திரைக்கதை ஆசிரியர், நாம் இதுக் குறித்து யோசித்தாக வேண்டும் என்றார். எனக்கு இந்த யோசனை பிடித்திருந்தது. எனது உடலை உலகத்தின் மிக மோசமான வெளியில் இருத்திப் பார்ப்பது. இந்த யோசனையை நான் ஆழமாக விரும்பத் துவங்கிவிட்டேன். இப்போது இந்த எண்ணத்தை அதன் உச்சபட்ச அழகியலோடு எப்படி சொல்வது என்பதைத்தான் நான் சாத்தியப்படுத்த வேண்டும். திரைப்படம் என்பது மிகவும் உணர்வுப்பூர்வமானது. திரையில் நடிகர்கள் சிரித்துக்கொண்டிருக்கும் காட்சியில்கூட பார்வையாளர்கள் அழும் தருணங்களும் உண்டு. அந்த நிலையில், என் கையில் ஒரு உணர்வுப்பூர்வமான கரு கிடைத்திருந்தது. அதனை எப்படி வளர்த்தெடுத்து சரியான வகையில் கவித்துவத்துடன் திரைப்படமாக்குவது என்பதுதான் எனக்கு இருந்த சவால். ஆனால், நான் சற்று பயத்தில்தான் இருந்தேன்.

எனக்கு இந்த கரு கிடைத்ததற்கு பிறகு, என்னால் ஓய்வாக இருக்க முடியவில்லை. தூங்குவது அரிதாகிப் போனது. அதனால், நான் எனக்குள்ளாக, "நாம் நம்பிக்கையுடன் தைரியமாக இருக்க வேண்டும்" என்றுச் சொல்லிக்கொண்டேன். நீங்கள் காதல் வயப்பட்டிருக்கும்போதும், தைரியமாகவும் முழு நிர்வாணமாகவும் இருக்கவேண்டும் என்பதற்கு நிகரான உணர்வெழுச்சி அது. இப்போது இந்த நேர்காணலில் ஆங்கிலத்தில் பதில் அளித்துக்கொண்டிருக்கிறேன் அல்லவா? அப்படியென்றால் எனக்கு எந்தளவிற்கு தைரியம் இருக்க வேண்டும். இதுபோல அப்போதும் என்னை மனதளவில் பலப்படுத்திக்கொண்டேன். வான்வெளியில் நட்சத்திரக் கூட்டங்களுக்கிடையில் தீர்க்கத்துடன் என்னை நோக்கி பிரகாசித்துக் கொண்டிருக்கும் இந்த ஒற்றைய பெரும் நட்சத்திரத்தை நானும் பின்தொடர்ந்து பயணிக்கத் துவங்கினேன்.



**இந்த கதையை எழுதி முடித்ததும், தயாரிப்பாளர்களை அணுகும் பணி சிரமமிக்கதாக இருந்ததா? இதுவொரு அழகான கதை என்றாலும் அதனை நிதி அளிப்பாளர்கள் சரியான வகையில் உணர்ந்துக்கொண்டார்களா? இத்தாலியில் உங்களது இந்த திரைப்படத்துக்கான முயற்சிக்கு ஆதரவு கிடைத்ததா?**

இத்தாலியை பொருத்தவரையில், ஓரளவுக்கு நான் விரும்பும் வகையில் எனது திரைப்படங்களை உருவாக்கிட முடியும். ஏனெனில், எனது முந்தைய அனைத்துதிரைப்படங்களுமே மக்கள் மத்தியில் பெரும் வரவேற்பை பெற்றவை. ஆனால், சிலர் என்னிடம் இனப் படுகொலை தொடர்பான பின்னணியை வைத்துக்கொண்டு என்ன வகையிலான திரைப்படம் உருவாக்குகிறீர்கள் என்று கேள்வி எழுப்பினார்கள். உண்மை என்னவென்றால் ஒரு கலைஞன் எப்போதும் மக்களின் எதிரில் நின்றுதான் செயல்பட்டாக வேண்டுமே தவிர, பின்னால் நின்றுகொண்டு அல்ல. நீங்கள் எளிதில் யூகிக்கக்கூடிய தன்மையில் இருந்தீர்கள் என்றால், குறுகிய காலத்திலேயே உங்களது திரையுலக வாழ்க்கை ஒரு முடிவுக்கு வந்துவிடும்.

முதலில் எனக்கு நான் முழு உண்மையாக இருக்க வேண்டும். எனக்கு இந்த திரைப்படத்துக்கான கருவின் மீது பெரும் விருப்பம் உண்டாகியிருந்தது. அதனால் எதன் பொருட்டும் அதிலிருந்து விலகும் எண்ணம் எனக்குள் எழவில்லை. பெரும் கோர தருணங்களான வதைமுகாம் சித்திரவதைகளுக்கான எனது எதிர்வினையை அல்லது எனது பங்களிப்பை ஏதேனும் ஒருவகையில் இத்திரைப்படத்தின் வழியே நிகழ்த்திவிட வேண்டும் என கருதினேன். இது ஒரு திரைப்படம் மட்டும்தான். திரைப்படங்கள் உலகத்தில் நிகழும் எதையும் மாற்றிவிடாது. ஆனாலும், இந்த திரைப்படத்தை நான் முழு அர்ப்பணிப்புடன் அணுக வேண்டுமென்று விரும்பினேன். இது நான் வழக்கமாகவே செய்வதுதான் என்றாலும், இந்த திரைப்படத்தில் எனது ஒட்டுமொத்த ஈடுபாட்டையும் முழுமையாக செலுத்த வேண்டும் என முடிவு செய்திருந்தேன்.

அதோடு, எனக்கு சிறியளவில் அச்சமும் இருக்கத்தான் செய்தது. ஏனெனில், பொதுவாக ஒரு நகைச்சுவை நடிகர் இதுபோன்ற பெரும் அதிர்வுமிக்க தருணங்களை கையாளக்கூடாது என்றொரு கருத்தும் நிலவி வருகிறது. யூத இனப் படுகொலை என்பது மிகப்பெரும் துயரம், என்றென்றைக்கும் ஈடு செய்ய முடியாத பெரும் துன்பியல் நிகழ்வு என்பதால் அவ்விதமான எதிர்வினைகள் வரும் என்பதையும் என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அதனாலேயே சிலர், இந்த கொடும் துயரத்தை ஒரு நகைச்சுவை கதையாக சொல்ல முடியாது என்பதில் உறுதியாக இருக்கிறார்கள். ஆனால், இக்கருத்து மாற்ற முடியாததோ அல்லது நிலைபெற்றுவிட்டதோ அல்ல. சில தருணங்களில் நகைச்சுவையின் வழியாக மட்டுமே மாபெரும் துயரத்தைக் பிறருக்கு கடத்த முடியும் என்று நம்புகிறேன். தாந்தேவின் Inferno-வில் சொல்லப்படுவதைப்போல பெரும் துயர் சூழந்திருக்கும் நிலையிலும் மகிழ்ச்சியாக இருப்பதற்கு முயற்சி செய்வதுதான் உலகத்தின் ஆகச்சிறந்த துயர் நிலை. அதனால்தான் எனது திரைப்படத்தின் இரண்டாம் பகுதி அதீத சோகமேற்படுத்தும் இயல்பை பெற்றிருக்கிறது. மக்கள் அந்த தருணங்களை பார்க்கின்றபோது, முதல் பகுதியில் நிகழ்ந்த மகிழ்ச்சிகரமான சம்பவங்கள் அவர்களது மனதில் படர்ந்து நெளிந்தபடியே இருக்கும்.

படத்தின் இரண்டாம் பகுதியில், நானொரு குட்டையான ஆடையை பயன்படுத்தியிருந்தேன். மிக மிக குட்டையான ஆடை. அரைகுறை உருமாற்றத்தைப்போல அந்த ஆடை இருக்கும் - பெண் வேடமிடும் கோமாளிகள் நகைப்புக்காக

அணிந்திருக்கும் ஆடையைப்போல - ஆனால், திரைப்படத்தில் அது பெரிதும் அச்சத்தை கிளர்த்தும் ஆடையாக இருக்கிறது. அதே சமயத்தில் கையறு நிலையின் உச்சபட்ச பிரதிபலிப்பாகவும் இருக்கிறது. அதேபோல, தவறாக மொழிபெயர்த்து சொல்லும் காட்சியும் நகைச்சுவைக்காக உருவாக்கப்பட்டதல்ல. அங்கு அவன் தனது மகனின் உயிரை காப்பாற்றியாக வேண்டும். அதனால்தான் உங்களால் அக்காட்சியின்போது சிரிக்க முடியவில்லை. நீங்கள் சிரிப்பீர்கள். ஆனால், உங்களது இருதயம் பல நூறு கூறுகளாக உடைந்து நொருங்கியிருக்கும். வெடித்திருக்கும். அங்கு வலிந்து இரக்க உணர்வை ஏற்படுத்த வேண்டிய தேவை இருக்கவில்லை. ஒரு கவிஞன் சொன்னதைப்போல, மிக ஆழமாக பதிந்திருக்கும் ஞாபகம் என்பது நாம் மறந்திருப்பதாக நினைத்திருக்கும் விஷயங்கள்தான். என்ன நடந்தது என்பதை நாம் ஆழமாக தெரிந்து வைத்திருக்கிறோம். அதனால், என்னை வெகு தொலைவாகவே நிறுத்திக்கொண்டு, சிறிய சிறிய சமிஞ்கைகளின் மூலமாக மட்டுமே நிகழும் தருணங்களை தொகுத்துக் கொடுத்திருக்கிறேன்.

இத்தாலியில் சிலர், ஏன் இந்த திரைப்படத்தை உருவாக்குகிறீர்கள் எனக் கேள்வி எழுப்பினார்கள். நான் அவர்களிடம், "எனக்கான பார்வையாளர்களில் சிலரை இழப்பது பற்றி எனக்கு கவலையில்லை. ஆனால், நான் நம்புகின்ற நேசிக்கின்ற ஒன்றை உருவாக்குவதுதான் எனக்கு முக்கியமானது" என்றேன். இருப்பினும், உள்ளுக்குள் லேசான பயம் இருக்கத்தான் செய்தது. திரைக்கதை எழுதி முடித்ததும், மிலானில் இருந்த ஒரு யூத குழுவினருக்கு அதனை அனுப்பி வைத்தேன். அவர்கள் அதனைப் படித்துவிட்டு, "இது நிகழக்கூடாது, இது தவறான சித்தரிப்பு, வரலாற்றை பொருட்படுத்தாதது" என்றார்கள்.

ஆனால், நானொரு கலைஞன். ஒரு ஆவணப்பட தொகுப்பாளரோ அல்லது வரலாற்று அறிஞனோ அல்ல. திரைப்படத்தின் முதல் பகுதியில் பல தருணங்கள் நானாக உருவாக்கியது என்பது எனக்கு தெரியும். அந்த காலத்தில், ஒரு யூதன் அவ்வளவு எளிதில் வேறொரு மதத்தை சார்ந்த பெண்ணை திருமணம் செய்ய முடியாது என்பது எனக்கு தெரியும். அதோடு, பிரெஞ்சு மொழியில் ஒப்பாரா பாடுவதும் சாத்தியமில்லாதது. முசோலினி அதனை தடைச் செய்திருந்தார். இவையெல்லாம் நான் எடுத்துக்கொண்ட கால பின்னணிக்கு முரணானவை என்பது எனக்கு தெரிந்தும், வேண்டுமென்றேதான் இவைகளை திரைப்படத்தில் பயன்படுத்தினேன். இதேப்போல இரண்டாம் பகுதியிலும் பல காட்சிகளை இவ்வகையில் சேர்த்திருக்கிறேன். ஒருவேளை நான் கணிசமான பார்வையாளர்களை இத்திரைப்படத்தினால் இழக்க நேரிடலாம். ஆனால், மிக அதிகமாக நேசிக்க துவங்கியிருந்த ஒன்றை அதற்காகவெல்லாம் கைவிட நான் தயாராக இல்லை.

ஆச்சர்யப்படத்தக்க வகையில், எனது படைப்புகளில் இந்த திரைப்படம்தான் இத்தாலியில் பெரு வெற்றிப் பெற்ற ஒன்றாக நிலைப்பெற்றிருக்கிறது. மக்கள் எனக்கு ஏராளமான கடிதங்களை எழுதினார்கள். யூதர்கள் என்னை வெகுவாக கொண்டாடினார்கள். எனது திரைப்படத்தின் மீதான இத்தகைய வரவேற்புக்கு நான் எவ்வகையில் அவர்களுக்கு நன்றிச் சொல்லப் போகிறேன் என்று எனக்கே தெரியவில்லை.

**பார்வையாளர்களின் கேள்விகள்:**

**முதலாவது கேள்வி: இனப் படுகொலை தொடர்பான திரைப்படத்தில் நகைச்சுவையை புகுத்தியது தொடர்பாக சில யூதர்களால் உங்களின் மீது வைக்கப்பட்ட எதிர்மறையான விமர்சனங்களை எப்படி எடுத்துக்கொண்டீர்கள்?**

எதிர்ப்புணர்வை தெரிவித்தவர்கள் மிகக் குறைவானவர்கள் என்பதையும், அவர்களது கருத்துகளை முழுமையாக நான் மதிக்கிறேன் என்பதையும் பலமுறை தெரிவித்திருக்கிறேன். இத்தகைய ஒரு கோர நிகழ்வை கையாளும்போது, இப்படியான எதிர்ப்பு குரல்கள் எழுவது இயல்பானதுதான். அது எங்கிருந்து எப்போது எழுந்து வந்தாலும் நான் அதனை மதிக்கிறேன். ஆனால், இதுபோன்ற ஒரு அணுகுமுறையை ஏன் எதிர்க்க வேண்டும் என்பதை இயல்பாகவே என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. உலகில் வதைமுகாம் சித்திரவதைகள் குறித்து ஏராளமான திரைப்படங்கள் வெளியாகி இருக்கின்றன. ஆனால், எனது திரைப்படம்தான் கொஞ்சம் நகைச்சுவை கலப்புடன் இதனை அணுகியிருக்கிறது. எதிர்வினை என்பது மிக அழுத்தமாகவே எழும்தான் என்றாலும், திரைப்படத்தின் இரண்டாம் பகுதி பெரும் துயரத்தை கிளர்த்தும் வகையில்தான் படமாக்கப்பட்டிருக்கிறது என்பதால், இந்த எதிர்ப்பு குரல்களை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

உங்களது கேள்விக்கு என்னால் நேரடியாக பதில் சொல்ல முடியவில்லை. அதற்காக வருந்துகிறேன். எதிர்ப்பு குரல்களை மதிக்கின்ற அதே சூழலில் அதனை என்னால் புரிந்துகொள்ள இயலவில்லை என்பதையும் பதிவு செய்ய விரும்புகிறேன். அவர்கள் தங்களது விமர்சனத்தை நியாயப்படுத்துவதற்காக இதுவொரு பாசிஸ சிந்தனைக்கொண்ட படம் என்றோ அல்லது எதிர்மறையான படம் என்றோ நிறுவ முயற்சித்தால், விளைவு இன்னும் மோசமாக அமைந்துவிடும்.

இந்த திரைப்படத்தின் எளிமையை அது அதுவாகவே வெளிப்படுத்திவிட வேண்டும். முதலில் இதுவொரு காதல் கதை. எனது மகனுக்கு அங்கு நிகழ்ந்துக் கொண்டிருக்கும் உண்மையை மறைத்து அதுவொரு விளையாட்டு என நான் சொல்வதற்கான காரணம், ஒரு ஐந்து வயது சிறுவனை பதற்றத்திற்குள்ளாக்கி கொலை செய்யப்படுவதில் இருந்து காப்பாற்றுவதற்கும், அவனது மூளை சிதறிவிடாமல் காப்பாற்றவும்தான். அந்த கொலைகளத்தை அவ்விதமாக விளையாட்டு களமாக கருத செய்வதன் மூலமாகவே அவனது இயல்பு காப்பாற்றப்படுகிறது. இந்த இயல்புத்தனமான அணுகுமுறைதான் மழலைத்தனத்தை பாதுகாக்கிறது. இதுதான் அதிக நேயமிக்க செயல் என்று கருதுகிறேன். நாம் எந்த அளவிற்கு இருதயபூர்வமாக தூய்மையாக இருக்கின்றோமோ அந்த அளவிற்கு நம்மால் கடவுளை நெருங்கிச் செல்ல முடியும். வதைமுகாமல் இருந்து தப்பியவர்களின் வாக்குமூலங்கள், ஆவணப்பதிவுகள்

போன்றவைதான் அசலான உண்மையை சொல்ல முடியுமென்று நினைக்கிறேன்.

பிரிமோ லெவியும்கூட ஒருமுறை, ஆஸ்ட்விச் வதை முகாமில் இருந்து தப்பித்திருந்த ஒருவனைப் பற்றி எழுதும்போது, 'நான் உண்மையைத்தான் எழுதினேன் என்றாலும் பத்து முறை எழுதிப் பார்த்தாலும் என்னால் நிறைவை எட்ட முடியவில்லை' என்றுத் தெரிவித்திருக்கிறார். அவர் அந்த தருணத்தை சொல்வதற்கான சரியான அணுகுமுறையை தேடிக் கொண்டிருந்தார் என்றே நினைக்கிறேன். ஒருவகையில், இதுவும் உண்மைக்கு துரோகம் இழைப்பதைப் போலத்தான். நீங்கள் ஒன்றை உருவாக்கும்போது, ஏதோவொரு வகையில் உண்மைக்கு துரோகம் செய்துதான் ஆக வேண்டும். நான் அந்த நினைவுகளை பெரிதும் மதிக்கிறேன் என்றாலும், அவ்வாறு தப்பிப் பிழைத்தவர்களில் நானும் ஒருவனல்ல. சிலர் அந்த சித்திரவதைகளை மௌனத்தால் மட்டுமே விவரிக்க முடியும் என்று சொல்வதை நானும் ஏற்றுக்கொள்ளவே செய்கிறேன்.

அதர்னோ (Adorno) ஒருமுறை, வதைமுகாம் சித்திரவதைகளுக்கு பிறகு, உலகத்தில் கவிதை என்பதே இல்லாமல் போய்விடும் என்றார். ஆனால், அவரது கூற்றுக்கு நேரெதிராக இப்போதும் கவிதை இருந்துக்கொண்டுதான் இருக்கிறது. ஏனெனில், வாழ்க்கையே முரண்களால் கட்டமைக்கப்பட்டதுதான். அதர்னோவே தொடர்ந்து கவிதைகளை எழுதிக்கொண்டுதான் இருந்தார். உண்மையில் இருந்து விடுபட்டு நின்றிருப்பதுதான், அந்த நிகழ்வுகளுக்கு செய்யும் பெரும் மரியாதையாக இருக்கும் என்று நம்புகிறேன்.

என்னால் ஸ்பீல் பர்க்கை போலவோ ஸ்கார்ஸஸியை போலவோ வன்முறையை நேரடியாக திரைப்படங்களில் சித்தரிக்க முடியாது. என்னுடைய அணுகுமுறை என்பது தொலைவில் இருந்தே, அந்த தருணங்களின் அபாயத்தை பார்வையாளர்களுக்கு கடத்துவதுதான். நாம் நேரடியாக சித்திரவதைகளை பார்க்கவில்லை என்கின்றபோதிலும், சில சமயத்தில் நமது உணர்வுகள் சீண்டப்படுவதன் மூலமாக, அந்த கொடூரத்தை நம்மால் உணர முடிகிறது.

இத்தாலியில், "இல்லையென்கின்ற உணர்வுதான், இருத்தலை தீவிரமாக கிளர்த்திவிடுகிறது" என்றொரு சொற்றொடர் இருக்கிறது. யூத வதைமுகாம் குறித்த புத்தகங்களை ஒவ்வொருமுறை வாசிக்கும்போதும், பாதியிலேயே எனது வாசிப்பை நான் நிறுத்தியாக வேண்டிய சூழல் உருவாகிறது. ஏனெனில், அதன் நுணுக்க விபரங்களை என்னால் எதிர்கொள்ள முடிவதில்லை. நாம் வதைமுகாமில் இருக்கிறோம். ஆனால், அந்த கோர சித்திரவதைகள் நாம் பார்ப்பதில்லை. என்றாலும் நம்மால் அதன் கொடூரத்தை உணர முடிகிறது. அது நம்மை சூழ்ந்து நிம்மதியிழக்கச் செய்கிறது.

பிரான்ஸ் காஃப்காவின் சிறிய கதை ஒன்று இருக்கிறது. ஒருமுறை மாக்ஸ் பிராட் எனும் அவரது நண்பர், தனது வீட்டுக்கு வந்து உறங்கும்படி காஃப்காவை அழைக்கிறார். அவரது அழைப்பை ஏற்று அங்குச் செல்லும் காஃப்கா, அவ்வீட்டின் அமைப்புமுறை தெரியாததால், தனக்கென ஒதுக்கப்பட்ட அறைக்கு பதிலாக மாக்ஸின் தந்தை உறங்கும் அறைக்கு சென்றுவிடுகிறார். உடனே பதற்றமாகும் காஃப்கா அவரிடத்தில், "என்னை மன்னியுங்கள். உங்களைத் தொந்திரவு செய்ய வேண்டுமென்று நான் நினைக்கவில்லை. என்னை ஒரு கனவு என்றே நினைத்துகொள்ளுங்கள்" என்கிறார். அதனால், எனது திரைப்படத்தையும் ஒரு கனவு என்றே எடுத்துக்கொள்ளுங்கள். நான் யாரையும் தொந்திரவு செய்ய விரும்பவில்லை. இது திரைப்படம் அல்ல. வெறும் கனவு மட்டுமே.

**கேள்வி இரண்டு: தொடர்ந்து திரையுலகில் இருப்பதற்கான ஒரு வழிமுறையாக நகைச்சுவையை பயன்படுத்துகிறீர்களா?**

இந்த திரைப்படத்தின் நாயகனான கில்டோவை போலவே நானும் இருக்க ஆசைப்படுகிறேன். ஏனெனில், அவன் ஒரு முன்னுதாரண மனிதன் மற்றும் தந்தை. அதோடு, அவனது மனைவியை பொருத்தவரையில், அவள் விண்ணுலகத்தில் இருந்து வந்த அதிசய பரிசைப் போன்றவள். இதனை இங்கு பகிர்ந்துகொள்வதற்கு உண்மையாகவே நானொரு அதிர்ஷ்டசாலிதான். நிக்கோலெட்டா பிராஸ்சிக்கு (Nicoletta Braschi - பெனிகினியின் மனைவி) இவ்விடத்தில் நன்றிக்கூற விரும்புகிறேன். அவரும் இங்கு இருக்கிறாள். அதோடு, இந்த திரைப்படத்தின் உருவாக்கத்தில் அவளது பங்களிப்பு மிகுதியானது. இந்த திரைப்படத்தை எழுதும்போதே, என்னால் தாங்கிக்கொள்ள முடியாத அல்லது நடிக்க முடியாத துயரார்ந்த தருணங்களை அவளுக்கென மாற்றி எழுதியிருந்தேன். அதற்காகவும் அவளுக்கு நான் நன்றி தெரிவித்தாக வேண்டும். வானில் இருந்து எனக்காகவே இறங்கி வந்திருக்கும் இந்த அற்புத நடிகையை பெற்றிருப்பதற்காக மிக ஆழமாக என் ஆன்மாவில் இருந்து அவளுக்கு நன்றி தெரிவிக்க விழைகிறேன். இந்த இரண்டு விஷயங்களுக்காக (நகைச்சுவை உணர்வு மற்றும் இந்த அழகிய பெண்) இத்திரைப்படத்தில் கில்டோவாக நான் இருந்திருப்பதை விரும்புகிறேன். ஆனால், கில்டோவை போல என்னால் அற்புதங்களை உருவாக்க முடியுமா என்று மட்டும் எனக்கு தெரியவில்லை.

**கேள்வி மூன்று: Life is beautiful திரைப்படத்துக்கும் The great dictator திரைப்படத்திற்கும் ஏதேனும் ஒப்புமைகள் இருக்கின்றனவா?**

நிச்சயமாக இருக்கிறது. நகைச்சுவையாளர்கள் எது செய்தாலும், நேரடியாகவோ அல்லது மறைமுகமாக ஏதேனுமொரு வகையில் அவர்கள் சாப்ளினுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறார்கள். ஏனெனில், அவர் எங்கள் எல்லோருக்கும் மேலான பேரரசன். இந்த திரைப்படத்தைப் பொருத்தவரையில், The great dictator மட்டுமல்ல The Kid திரைப்படத்திற்கும் தொடர்பு இருக்கிறது. அந்த திரைப்படமும் ஒரு சிறுவனை பாதுகாப்பது தொடர்பானதுதான். சாப்ளின் உருவாக்கிய The great dictator மிகச் சிறப்பான ஆக்கம்தான் என்றாலும், இனியொருவரும் ஹிட்லர் கதாப்பாத்திரத்தை நகைச்சுவையாக அணுக முடியாத சூழல்தான் இருக்கிறது. ஏனெனில், ஹிட்லர் செய்திருக்கும் நாசகார செயல்கள் நமக்கு தெரியும். தனிப்பட்ட வகையில், ஹிட்லரைப் பார்த்து என்னால் சிரிக்க முடியாது என்றே கருதுகிறேன். சாப்ளினே



கூட, “ஹிட்லரின் செய்கைகளை நான் முழுமையாக அறிந்திருந்தால், அங்கு என்ன நடந்திருந்தது என்பது எனக்கு தெரிந்திருந்தால், நிச்சயமாக எனது திரைப்படத்தை வேறொரு கோணத்தில் அணுகியிருப்பேன்” என்றார். அவ்வுணர்வை மிக ஆழமாக என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவர் முசோலினி மற்றும் ஹிட்லரை வைத்து நிறைய ஸ்லாப்ஸ்டிக் நகைச்சுவையை செய்திருக்கிறார். அது நிஜமாகவே முகத்தில் கேக்கை பூசுவதைப் போன்றதுதான் என்றாலும், அக்காட்சியை பார்க்கும்போது எனக்குள் அச்ச உணர்வே மேலெழுந்தது. சாப்ளினின் மூளையில் என்ன நிகழ்ந்துகொண்டிருந்தது என நினைத்து வியக்கிறேன். ஏனெனில், அது ஆயிரமாயிரம் கயிறுகளால் நமது வாயை கட்டியிருப்பது போலவும், நிதானமிழக்க செய்யும் வகையிலும் உருவாக்கப்பட்டிருந்தது.

அந்த திரைப்படத்தை நான் வலியுடனேயே நினைவில் வைத்திருக்கிறேன். குறிப்பாக, உணர்வெழுச்சியை தூண்டும் வகையிலான அதன் இறுதிக்காட்சிகளை. பொதுவாக, அத்தகைய உணர்வை மெலெழுப்பும் காட்சிகளுக்கு நான் எதிரானவன் என்றாலும், சாப்ளின் முற்றிலும் வேறானவராக எனக்குத் தோன்றினார். அந்த திரைப்படத்தின் முடிவு முன்னதாகவே பலமுறை பலரும் கையாண்ட உத்தியில்தான் உருவாக்கப்பட்டிருந்தது என்றாலும், இப்போது அந்த திரைப்படத்தின் இறுதிக் காட்சிகளை நான் பெரிதும் விரும்புகிறேன்.

எனது திரைப்படத்தில் நேரடியாக The great dictator-க்கு மரியாதை செலுத்தும் இடம் ஒன்று இருக்கிறது. அந்த திரைப்படத்தில் சாப்ளினின் கைதி எண்ணான 3797 என்பதையே நானும் எனது திரைப்படத்தில் பயன்படுத்தி இருக்கிறேன். அதேப்போல, மிகச் சிறந்த மற்றொரு திரைப்படமான To be or not to be-க்கும் எனது திரைப்படத்தில் மரியாதை செய்திருக்கிறேன். அதில் ஒரு சிறுவனுக்கு ஒரு தவறான மனிதன் ராணுவ டாங்கி ஒன்றை பரிசளிப்பான். அதே ராணுவ டாங்கியைத்தான் நானும் எனது திரைப்படத்தில் உபயோகித்திருக்கிறேன்.

**கேள்வி நான்கு: எனக்கு இந்த திரைப்படம் பிடிக்கவில்லை. ஏனெனில், இது வரலாற்றை திரித்து உருவாக்கப்பட்டிருக்கிறது என்பதோடு, தேவையற்ற வகையில் அதீத உணர்வெழுச்சியை தூண்டும் வகையிலும் நிறைவுகொள்கிறது. இந்த விமர்சனத்துக்கு நீங்கள் எப்படி எதிர்வினையாற்ற போகிறீர்கள்?**

உங்களது கருத்தை மதிக்கிறேன். இந்த கருத்து ஏற்கனவே பலமுறை என்னிடம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு திரைப்படத்தை நாம் பல்வேறு முறை பார்க்கும்போது, அந்த படத்தின் மீதான நமது உணர்வும் எண்ணங்களும் மாறிக்கொண்டே இருக்கும். இதனால், முதல்முறை மிக இயல்பாக இருந்த படத்தின் மீதான நமது அணுகுமுறை மாறிவிடுகிறது. இதுதான் நமது ஞாபகத்தில் ஏற்படுகின்ற மிகப்பெரிய துயரார்ந்த விஷயம். நமது மூளையில் தாந்தேவின் நரகம் வந்து இறங்கிவிடுகிறது. ஆனால், நீங்கள் முதலில் தெரிவித்த விஷயத்துக்கு நான் பதிலளித்தாக வேண்டும்.

ந்த திரைப்படத்தில் காண்பிக்கப்பட்டிருக்கும் வதைமுகாம் என்பது எந்தவொரு குறிப்பிட்ட வதைமுகாமின் நேரடி சித்தரிப்பு அல்ல. இது இத்தாலி அல்லது ஜெர்மனி என்று எங்கும் குறிப்படப்படவில்லை. மையக் கதாப்பாத்திரங்கள் ஜெர்மனில் பேசுகிறார்கள் என்பதால், கதை நிகழும் இடத்தை ஜெர்மனியாக நாம் நினைத்துக்கொள்கிறோம். ஆஸ்ட்விச் வதைமுகாம் என்றோ பெர்கனூ வதைமுகாம் என்றோ நான் குறிப்பிட்டு சொல்லவில்லை.

ஏனெனில், பார்வையாளர்கள் உடனடியாக இது அந்த வதைமுகாமைப்போல காட்சியளிக்கவில்லை என்று சொல்லிவிடுவார்கள் என்பது எனக்குத் தெரியும். நான் முற்றிலும் சுதந்திரமானவனாகவும் அதே சமயத்தில் அந்த நிகழ்வுகளின் பின்னுள்ள உணர்வுகளை மதிக்கக்கூடியவனாகவும் இருந்தே இந்த திரைப்படத்தை உருவாக்க எண்ணினேன்.

உதாரணத்திற்கு, எந்தவொரு வதைமுகாமும் மலையடிவாரத்தில் இல்லை என்பது நமக்கு தெரியும். அதனால்தான், எனது திரைப்படத்தில் உருவாக்கிய வதைமுகாமை மலையின் பின்னணியில் அமைந்திருந்தேன். நான் ஆவணப்படத்தை உருவாக்கவில்லை என்கின்ற தெளிவு என்னிடம் எப்போதும் இருந்துகொண்டிருந்தது. அதுபோலவே, இது பேரழிவு தருணத்தைப் பற்றிய கருத்துப் படமும் அல்ல.

இரண்டாவதாக, உணர்வெழுச்சியை தூண்டு வகையில் காட்சிகள் இருந்ததாக நீங்கள் தெரிவித்திருந்த கருத்துக்கு மன்னிப்பை கோருகிறேன். முன்பே தெளிவாக குறிப்பிட்டிருந்தேன். வலிந்து உணர்வை தூண்டும் முறையை நான் மிக மிக மிக அதிகமாகவே வெறுக்கிறேன். இதனை தவிர்க்க வெகுவாக நான் முயற்சித்தேன். ஒரு தந்தை தனது மகனுடன் ஆபத்தில் சிக்கியிருக்கிறான் எனும் இதன் மூல ஐடியா உருவானபோது, முதலில் எனக்கு எழுந்த உணர்வு என்பது, இது அபாயகரமானதாக இருக்கிறது. நாம் எல்லோரும் தொலைந்தோம்!

ஒரு சிறுவன் பேரழிவு சூழலில் சிக்கியிருக்கிறான் எனும் எண்ணத்தை நான் வெறுக்கிறேன். அதுவொரு மிரட்டலைப் போன்றது. அதனால் இது மிகவும் கடினமானது. என்னால் இதனை நெகிழ்வூட்டும் திரையாக்கமாக அன்றி வேறு எப்படியும் உருவாக்க முடியாது என்பது உரைத்ததும், இந்த திரைப்படம் குறித்து சிந்திப்பதையே கிட்டதட்ட நிறுத்திவிட்டேன். படத்தில் நான் மகனுடன் சேர்ந்து அழவில்லை. என்னை நினைவு வைத்துக்கொள் எனும் உருக்கமாக பேசவில்லை. மனிதர்களை வெறுக்காதே என உபதேசம் செய்யவில்லை. நான் எப்போதும் நகைச்சுவையாகவும் சமயங்களில் கடினமானவனாகவும் மட்டுமே திரைப்படத்தில் இருக்கிறேன். இறுதியில், அவனை முத்தமிடுகிறேன். ஏனெனில், எனது கதையின் விவரிப்பு முறைக்கு அது தேவையாக இருந்தது. அது சிறிய அளவில் விடைபெறுதலுக்கான குறியீடாக மட்டுமே கையாளப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில், எந்தவொரு குழந்தையும் விரும்பும், மிகச் சிறந்த பண்புகளை கொண்ட, மெல்லிய உணர்வுகொண்ட தந்தையாக படத்தில் நானிருப்பதை என்னால் பார்க்க முடிகிறது.

நான் எப்போதும் எனக்கான அக நிறைவை மட்டுமே மூலாதாரமாக கொண்டு ஒரு செயலில் இறங்குவதில்லை. நான் முயற்சித்தேன். எனினும், ஒரு சமன்பாடு தேவையாய் இருந்தது. இதையெல்லாம் விடவும் சிறிய சிறிய குறைகள் கதை விவரித்தலில் இருக்கத்தான் செய்கிறது. அதைப் பற்றி இப்போது பேச விரும்பவில்லை. இந்த திரைப்படத்தை மிகத் தீவிரமான ஆய்வுக்கு உட்படுத்த வேண்டிய தேவை இல்லை என்றே கருதுகிறேன். இது மிகவும் எளிமையான திரைப்படம். ஒரு நூறு முறை திருத்தி திருத்தி எழுதியதற்கு பிறகே, அந்த சிறுவனுக்கு சிறுவனுக்குரிய மொழியை பயன்படுத்தினோம். பெரியவனைப்போல அவன் பேசினால் ஒட்டுமொத்த உணர்வும் குலைந்துவிடும். கூடுமானவரையில், எளிமையாக இந்த திரைப்படத்தை உருவாக்க விரும்பிய நாங்கள், அதே சமயத்தில் உண்மையில் இருந்து முற்றிலுமாக விலகிவிடவும் கூடாது என்பதில் உறுதியாக இருந்தோம்.

கவிஞர் ஜான் கீட்ஸ் தெரிவித்ததைப்போல, “உண்மையானதால் அது அழகாக இருப்பதில்லை. ஆனால், அழகான ஒன்று உண்மையாகிவிடுகிறது”. இவ்விரண்டிற்கும் நிறைய வேறுபாடுகள் இருக்கின்றன. நீங்கள் ஒன்றை மிக அழகாக உருவாக்கும்போது, அது உண்மை என நிலைத்துவிடுகிறது. அதே சமயத்தில் இது உண்மையாக இருப்பதால் மட்டுமே அழகானதாக இருப்பதில்லை. உண்மை அச்சுறுத்தும் வகையிலான கதையாகவும் இருக்கலாம்.

முதலில் இது புனைவால் உருவாக்கப்பட்டிருப்பது. நீங்கள் ஒரு உண்மை கதையை உருவாக்குகிறீர்கள் என்றாலும், கூடுமானவரையில் அதனை மிகைப்படுத்த வேண்டும். அதுதான் ஒரு கலைஞனின் பணி. அவன் உண்மையை மழுங்கடித்து அதன் மீது தனது கருத்தியலை கட்டியெழுப்ப வேண்டும். இவை கனவுகளை ஒத்தவை. ஏனெனில், மொழிகள் வேறுபாடுகளை கொண்டவை. இல்லையெனில், நாம் வெறுமனே போலிதான் செய்துகொண்டிருப்போம். போலி செய்வது கலைஞனின் வேலையும் அல்ல.

**கேள்வி ஐந்து: உங்களது கலை செயல்பாட்டில் ஒரு கதையை சொல்லுவதன் மீதுதான் நீங்கள் அதிக சார்புடைவராக இருக்கிறீர்கள் எனத் தோன்றுகிறது. ஆனால், கதைச் சொல்லும் முறையில் ஏதேனும் சிக்கல் உருவெடுத்தால் என்ன செய்வீர்கள்?**

இது மிகவும் சுவாரஸ்யமான கேள்வி. தனித்தன்மை வாய்ந்த கேள்வியும்கூட. நான் என்னை ஒரு கதைச் சொல்லியாகத்தான் உணருகிறேன். கதைச் சொல்வதை பெரிதும் விரும்புகிறேன். உலகத்தின் மிகத் தொன்மையான செயல்பாடுகளில் - பாலியல் தொழிலுக்கும் முன்னதாக - ஒன்றாக கதைச் சொல்வதை நான் பார்க்கிறேன். எனது வாழ்க்கையில் கதைச் சொல்லாத தருணங்கள் மிகச் சொற்பமானவையே. எனது திரைப்படத்தில் ஒருவகையில் மௌனத்திற்கும் நான் மரியாதை செலுத்தியிருக்கிறேன். ஒரு உள்ளுறைந்த சந்தம் இருக்கிறது. இவை அனைத்தும் தாமாக ஒரு கதையை தம்மளவில் சொல்லிக் கொண்டிருக்கின்றன. ஆனால், உங்களது கேள்விக்கு பதில் சொல்வது மிகவும் கடினமாக இருக்கிறது. ஆந்த்ரேயன் எனக்கு உதவி செய்வார் என்று நம்புகிறேன்.

**ஆந்த்ரேயன்: எனது உதவி இல்லாமலேயே நீங்கள் மிக சிறப்பாக பதில் அளித்துவிட்டீர்கள். ஒருவேளை நான் பதில் அளிக்க முயன்றிருந்தால், பெரியளவில் குழப்பமுற்றிருப்பேன். இங்கு குழுமியிருக்கும் அனைவரையும் எழுந்து நின்று ராபர்த்தோவுக்கு மரியாதை செலுத்த வேண்டுமென்று பணிக்கிறேன்.**

*உங்கள் அன்புக்கு நன்றிகள்! மிகுந்த நன்றிகள்!* ●

**ராம் முரளி <raammurali@gmail.com>**

# டி. கண்ணன் கவிதைகள்

1

கிராமத்து பூசாரிகளின் வாரிசுகள்
நகரமேகி நாளாகிவிட்டன
இடர் நேரும் பொழுதெல்லாம் தம்
தெய்வங்களை அவர்கள் வேண்டாமலில்லை
நகரத்து 'பிளாட்பார்ம்'களில் அவைகள்
பிச்சை எடுத்துக் கொண்டிருக்கின்றன
கொடைக்கு
ஊருக்கு திரும்பாதவர்கள்
அல்லர்
அவர்கள்
அப்போது உயிர் பெறுகின்றன
அத்தெய்வங்கள்

2



குருட்டுத் தந்திரங்கள்
இனிப்பானவை
வாழ்க்கையின் நீண்ட பயணத்தில்
அவை பல்லிலித்து விடுகின்றன
ஆனாலும் காலம் (நினைவு) அவற்றை
காப்பாற்றி விடுகிறது

3

அனாதையாய் சுற்றிக் கொண்டிருக்கும்
எனைக் கண்காணிக்கும் அந்த எண்கள்
ஐந்து நட்சத்திர "சுடோகு'வில் சிக்கிக் கொண்டன
என் மனம்
வட்டமா?
அல்லது சதுரமா?
அன்றி வேறோர் வடிவமா?
எனக் கூவிக்கொண்டு
அச்சிறு சதுரத்தில்
விளையாடிக் கொண்டிருக்கின்றன ●

"டி. கண்ணன்" <krishnaswamy164@gmail.com>

# சிற்றெறும்பின் கால் தடம்

மாலதி மைத்ரீ ஓவியம்: Wahab Jaffer

## சீதை கண்ணகி துரௌபதைப் பெண்களா? அடிமைகளா?

சுதந்திரத்திற்குப் பிறகு புதிய தொழில்நுட்பத் திறமைகளைக் கைப்பற்றி திரைக்கலையை வளர்த்து தமிழ்ச் சமூகத்துக்கு வழிக்காட்ட வந்த தீர்க்கத்தரிசிகள், கலைஞராகி பெரும் பேரும் பொருளும் ஈட்டி ஆட்சியைப் பிடிக்கக் கிளம்பியப் புரட்சியாளர்கள், ஏட்டுக் கல்விக் கற்கத் தொடங்கிய முதல் தலைமுறைப் பெண்களுக்கு, "இப்படித்தான் இருக்க வேண்டும் பொம்பள, இங்கிலீசுப் படிச்சாலும் இந்தத் தமிழ்நாட்டுல இப்படித்தான் இருக்க வேண்டும் பொம்பள" என்றார்கள்; இதற்கு அடுத்தத் தலைமுறை, "என் மன்னன் எங்கே, என் மன்னன் எங்கே" என்று, மேற்கல்விப் படித்துத் தொழில் வாய்ப்புகளைத் தேடிச் செல்ல வேண்டிய பெண்களை 16 வயதிலேயே கணவனைத் தேடக் கற்றுத் தந்தார்கள்.



படிக்கக் கிளம்பிய பெண்கள் பகட்டுக்கு ஆசைப்பட்டுக் கெட்டுச் சீரழிவார்கள், 'பெண்புத்திப் பின்புத்தி' என்று திரும்பத் திரும்பப் பதிய வைப்பதிலும், பெண்களுக்குக் கற்பிக்கப்பட்ட சட்டதிட்டங்களை (தன்னிலையை) மறந்துவிடாமலிருக்க மிரட்டிக் கொண்டிருப்பதுமே இதிகாச இலக்கியங்கள் தொடங்கி, நவீன திரைக் காவியங்கள் வரையான, கலை இலக்கியங்களின் தலையாயக் கடமையாக இருந்திருக்கிறது. சமூகத்தில் எப்போதும் பெண்ணின் நிலையை வரையறுத்துக் கட்டுப்படுத்திப் பெண்ணை அடக்குவதிலேயே கவனமிருந்திருக்கிறது ஆண்களுக்கு.

'கற்பு' விதிப்படி ஒரு பெண் 'கெட்டுப்போக' ஒரு ஆண் தேவை என்பதும், ஒரு பெண்ணால் தனித்துக் 'கெட்டுப்போக' முடியாதென தெரிந்திருந்தும், அந்த ஆணிகளிடம் பெண்களுக்கு மதிப்பளியெனச் சொல்ல ஒரு வார்த்தை இன்னும் கிடைக்கவில்லை, இந்தக் கோவலர்களுக்கு. கலாச்சார வறுமையிலும் மொழி வறுமையிலும் சிக்கித் தவித்தத் தமிழர்களின் 'மன்மத லீலை' அகராதிக்கு இப்போதுதான் இந்திக் திரையுலகிலிருந்து "நோ மீன்ஸ் நோ"வை நாகரீகமாகக் கடன் வாங்கியிருக்கிறார்கள்.

ஒருத்திக்கு ஒருவனென்று காலந்தோறும் பெண்களுக்கு வாழ்வியல் சட்டத்திட்டங்களையும் பாலுறவு விதிகளையும் வகுத்துக் கொடுத்துவிட்டு, அரசன் முதல் அன்னக்காவடி வரை எந்த ஆணும் அதைக் கடைப்பிடிக்க வேண்டிய சுயஒழுக்கம் தேவையில்லை என்கிறது சமூகநீதி. சமூகத்தின் பாரபட்சமான குடும்ப உறவு நடைமுறையில் வஞ்சிக்கப்படும் பெண் அல்லது அரிதாகச் சுயத்தேர்வின்பால் எழும் பெண்களின் பாலுறவு நாடலை இச்சமூகம் மிகக் கொடூரத் தண்டனைகள் மூலம் தடுக்க முயல, பெண் முடிவெடுத்துவிட்டால் காற்றாற்று வெள்ளத்துக்குத் தடைப்போட யார் முயன்றாலும், தாய்மை அணையை மீறி வான்பாய்ந்து விடுகிறது காதல். புல்லுக்கு பொசிகிறதா நெல்லுக்குப் பொசிகிறதாவென வருத்தமின்றி.

காதலுக்காக் குழந்தைகளைக் கொன்ற சென்னை அபிராமியை தூக்கிலிடக்கோரிப் போராடி ஓய்ந்த உத்தமர்களுக்கு, 'கவர்னர் மாளிகை முக்கியஸ்தருக்கு' அருப்புக்கோட்டை கல்லூரி மாணவிகளைக் கடத்த முயன்ற அதிகாரிகள், ஆட்சியாளர்கள் பதவியிலிருப்பது உறுத்துவதில்லை. ஒரு தொலைக்காட்சி நிகழ்ச்சியில், நடிகை வனிதாவின் அத்துமீறியப் பேச்சைக் கண்டிக்க அவரின் தனிப்பட்ட வாழ்க்கைக்குள் அநாகரிகமாகப் புகுந்து நடத்தைக் கெட்டவளென ஆபாசத்தாக்குதல் நடத்தும் கலாச்சாரக் காவலர்கள், நாளைய முதல்வர் கனவிலிருக்கும் கமல்ஹாசன் அதே தொலைக்காட்சி நிகழ்வில் தவறிழைத்தால் அவர் எத்தனை மனைவியோடு எத்தனை காதலியோடு வாழ்ந்தார் என்பதையெல்லாம் சுட்டி, நடத்தைக் கெட்டவனென தூற்றுவதோ முதல்வராக தகுதியில்லையொன்று போராடுவதோயில்லை.

இதே வனிதா போன்றவர்கள் ஒரு அரசியல்கட்சி தொடங்கி முதல்வராகிறேன் என்று வரமுடியாது. வனிதா என்ன சமூகப் போராளியா அரசியல் தலைவராக என்றால், கமல் மட்டுமில்லை திடீர் தலைவராகி அரசியலுக்கு வரும் நடிகர்களெல்லாம் சமூகப் போராளிகளா.

சீதைக் காலம் தொடங்கி சமூகத்தில் பெண்கள் தங்களின் கற்பைச் சாகும்வரை நிரூபிக்க வேண்டிய அழுத்தம் ஏதோ வடிவில் இன்றும் நடைமுறையிலிருப்பதுஎப்படி சாத்தியமாகிறது. சமூகம் வகுத்துள்ள ஒழுக்க விதிகள் சொல்கின்ற பெண், ஆண் இடையான காதல், காமம், கலவி விதிகள் இருவருக்கும் ஒத்த கேள்விகளை ஒத்த விளக்கங்களை கேட்கவோ பெறவோ அதற்கான ஒத்தத்தண்டனைச்சாட்டையைச்



சொடுக்கவும் முயற்சிப்பதில்லை. பிரச்சினையாகும் தனிநபர் உறவுச் சிக்கல்களில் பெரும்பாலும் பெண்ணே குற்றவாளியாக்கப்படுகிறாள் என்றால், பாலியல் வன்முறைக்குள்ளான சம்பவங்களிலும் பாதிக்கப்படும் பெண்களே குற்றவாளிக்காக்கப்பட்டு, அவமானத்திற்கும் இழிவுக்கும் தண்டனைக்கும் உள்ளாக்கப்படுகிறார்கள்.

பொள்ளாச்சி சம்பவத்தில் பாதிக்கப்பட்ட பெண்களும் பெற்றோரும் அவமானத்தில் அடையாளத்தைக் காட்டிக்கொள்ளாமல் மறைந்து வாழும் நிலையும், பாதிக்கப்பட்டவர்களின் அடையாளத்தை பொதுவெளியில் அம்பலப்படுத்தி நீதிக் கிடைத்துவிடாமல் முடக்க நினைக்கும் அதிகாரிகளும் ஆட்சியாயளர்களும் எவரின் பிரதிநிதிகள்? குற்றவாளி மகன்களை உருவாக்கிய குடும்பங்கள் குற்றவுணர்வோ அவமானமோ அடையவில்லை. தன் மகன் தவறு செய்யவில்லையென்றும் வேறொருத்தன் செய்த தவறுக்குப் பலிகடாவாக்கப்பட்டானென்று ஒரே குரலில் வாதிக்கின்றனர். பெண்கள் தடுக்கி விழுந்தால்கூட, 'எவனை நினைத்துக் கொண்டு மெதப்பில் நடந்தாளோ' என்று காரணம் கற்பிக்கக் கற்றுள்ள சமூகம், ஒரு ரேப்பிஸ்ட் குற்றவாளியில்லை, வினையை விலைக்கு வாங்க ஆண்களுடன் பழகிய பெண்களின் தவறுயென்றும் சொல்ல இன்றைய அரசியல் சட்டத்தில் வழியிருக்கிறதா? ஆனால், பெண்கள் பாதிக்கப்படும் போதெல்லாம் தற்கால அரசியல் சட்டத்தின் நியாயம், அறத்துக்கு மாறாக மநுவின் சட்டப் புத்தகத்தை சுமந்தபடி, அடிமை அறத்தை வலியுறுத்துகிறது பொதுப்புத்தி.

சமூகம் சொல்கிறது, ஆண் வெளிப்படையாக பல பெண் உறவுகளையும் ஏற்படுத்திக் கொள்வான்; பேசுவான்; எழுதுவான்; அதைத் தடுக்க முடியாது, ஆனால், நாங்கள் பெண்களுக்கு சில ரகசிய சலுகைத் தருகிறோம், பெண்களே உங்கள் உடலுறவு சங்கதிகளை நாலு பேருக்கு தெரியாமல் கசியாமல் பார்த்துக்கொள்ளுங்கள். அதில் லாபமோ நட்டமோ உனக்குள் வைத்துக்கொள்; உன் ஆடையை நேர்த்தியாக்கவெளித்தெரியாமல் குத்திவைக்கும் ஊக்கு மாதிரி மறைவாக வைத்துக்கொள்; கையில் அள்ளிய நீர்மாதிரி உன் காமத்தை அள்ளித் திரியாதே; தவறியும் வெளியே பகிர்ந்துக்கொள்ளாதேயென எச்சரிக்கிறது. ஆனால், ஆன்ட்ராய்டுகளின் ஆயிரமாயிரம் கண்களிலிருந்து எதும் இங்கு தப்புவதில்லை இப்போது.

ஹேப்பன், டின்ட்டர், ட்ரூலி மேட்லி,

ஆக்குபைட், காபி மீட், பாகல் வூ, ஹின்ச், பாடூ, அசில் என்று பிளைண்டு டேட்டிங் ஆப்புகள் நுழைந்துவிட்ட மின்னணுவியல் உலகில் நம் தமிழ்ப் பெண்களும் ஆண்களும் கையடக்கமாகக் கலவியைப் பழகிக்கொண்டிருக்கின்றனர். பெற்றோர் மேட்ரிமோனியல் சைட்டில் தங்கள் வீட்டு ராஜகுமாரிகளுக்கும் ராஜகுமாரன்களுக்கும் வரன் தேடியலைகிறார்கள். நாம் இன்னமும் கற்பு, வெங்காய மூட்டைகளை டன் கணக்கில் பெண்களுக்கென குடும்பத்தில், சமூகத்தில், கலை இலக்கியங்களில், ஊடகத்தில், அரசியலில் இரைத்துக் கொண்டிருக்கிறோம். இங்கு உருவாக்கப்பட்ட கற்புச் சமூகவிதிகள் அனைத்தும் கற்பனையானவை, அதிகாரச் சார்பானவை. ஆணாதிக்கத்தின் கையிலிருக்கும் அலாவுதீன் விளக்கு அது.

பெண் - ஆண் உறவுக்குள் ஒரு நேர்மை அவசியமில்லையா என்றால், கண்டிப்பாக அவசியம். அந்த எல்லைக் கோட்டை ஒருவர் தாண்டிய பின் அவ்வுறவு அநீதியான உறவாகிவிடுகிறது. அவ்வுறவு வன்முறையாகி குழந்தைகளும் சிக்கிக்கொண்டால் பாதிப்பின் வலியும் சுமையும் பெண்களுக்கு கூடுதல் தண்டனையாகிவிடுகிறது. இச்சமூகம் பெண்களுக்கான சமூகமில்லை என்பதாலும், பெண்களைப் பாதுகாக்கச் சாதகமான ஆதரவான சட்டங்கள் வெளிகள் நிறுவனங்கள் இல்லை என்பதுடன், சொத்துரிமையற்ற அனாதைகள் பெண்கள் என்பதால், வாழ்வியல் நெருக்கடியையும் எதிர்த்து நிற்க முடியாத உளவியல் நெருக்கடியையும் அடைகிறார்கள்.

ஒரு பெண் பல ஆண்களுடன், ஒரு ஆண் பல பெண்களுடன் வாழும் உறவுமுறையை பாலிகாமஸ் (Polygamous) என்கின்றனர். மனித குலத்தினர் மிருகங்களிடமிருந்து வேறுபட்டவர்கள், நாகரீகமடைந்தவர்கள், சிந்திக்கத் தெரிந்தவர்கள் என்றும், எனவே ஒருத்திக்கு ஒருவன் வாழ்வியல் அறமே சிறந்தது என்று ஒரு கட்டமைப்பை ஆண்களுக்கு வசதியாக உருவாக்கி வைத்துள்ளனர். ஒருத்திக்கு ஒருவன் வாழ்வியல் உறவான மோனோகமி (Monogamy) வளர்ந்த சமூகத்தின் கலாச்சாராம் என உருவகித்து அதற்கு தொன்மங்கள், ஒழுங்குகள், மதிப்பீடுகள், புனைவுகள், கதைகள், நாட்டார் வழக்காறுகள் உருவாக்கி ஏட்டளவிலும் வாய்மொழியளவிலும் சட்டத்திட்டமாக்கப்பட்டுள்ளன.

பாலிகாமஸை (Polygamous) இருவகையாக பிரிக்கிறார்கள். ஒரு பெண் பல ஆண்களுடன் வாழும் உறவு பாலியன்ட்ரி (Polyandry) என்றும், ஒரு ஆண் பல பெண்களுடன் வாழும் உறவு பாலிகமி (Polygamy) என்றும் அழைக்கின்றனர். மகாபாரத பாண்டவர்களும் சென்ற தலைமுறை வரை கேரள நம்பூதிரி பார்ப்பனர்களும், ஒரு பெண்ணுக்கு பல கணவர்கள் என்ற திருமண உறவு (பாலியன்ட்ரி) முறையைக் கடைப்பிடித்து வந்தவர்கள் எனச் சொல்லப்படுகிறது. இலங்கை கண்டி சிங்களர்களிடம் சென்ற நூற்றாண்டு வரை பாலியன்ட்ரி வழக்கமிருந்திருக்கிறது. தென்னிந்தியாவில் இவ்வழக்கம் ஒழிக்கப்பட்டது என்றாலும் மத்தியப் பிரதேசம், இமாச்சல் பிரதேசம், உத்திரகண்டிலும், நேபாளம், திபெத் மற்றும் சில கண்டங்களில் உலகளவில் வெகு சிறுபான்மையாக அரிதாகச் சில சமூகத்தில் ஒரு பெண் குடும்பத்தில் உள்ள அனைத்து சகோதரர்களுடன் சேர்ந்து வாழும் பாலியன்டரி சமூக மரபு வழக்கத்திலிருக்கிறது.

மாட்ரிலீனியல் (Matrilineal) என்னும் தாய்வழிச் சமூக வாழ்வியல் முறையும் பாலியன்ட்ரியும் (Polyandry) வாழ்வியல் முறையும் சமூக அரசியல் பொருளாதார அதிகாரத்தளத்தில் முற்றிலும் வேறு வேறானவை. தாய்வழிச் சமூகத்தில் பெண் நிலமுடையவளாக, சொத்துடையவளாக, அதிகாரம் படைத்தவளாக, முடிவெடுப்பவளாக, திட்டமிடுபவளாக இருந்ததை ஏற்றுக்கொள்ள முடியாத ஆண்கள், பெண்களை வீழ்த்த அடிமையாக்க உருவாக்கிய முறைகள்தான் பாலியன்ட்ரி, பாலிகமி, மோனோகமி வாழ்க்கை முறை. இவ்வாழ்வியல் முறைகளில் பெண் அடிமையாக்கப்பட்டிருக்கிறாள். மாட்ரிலீனியல் முறையை ஒழித்து உருவாக்கிய வாழ்வியல் முறைகளில் பெண்களுக்கு நிலவுரிமை, சொத்துரிமை கிடையாது. நிலம், சொத்து முழுவதற்கும் ஆண்களே பரம்பரை வாரிசுகளாகத் தொடர்வார்கள்.

சென்ற தலைமுறை வரை கேரள நாயர் சமூகத்தில் தாய்வழிச் சமூகமுறை (மாட்ரிலீனியல்) வழக்கிலிருந்ததை அறிவோம். தற்போது சீனாவில் யுன்னான், சிச்சுவான் பகுதியில் மோசுவா இனக்குழுக்களிடம் மட்டுமே தாய்வழிச் சமூக வழக்கம் எஞ்சியிருக்கிறது (சில அபார்ஜின் குழுக்களிடம் வழக்கத்தில் இருக்கலாம்). மறைமுகமாக பாலியன்ட்ரி வாழ்வியலை தங்களின் குடும்ப நலன், நன்மை கருதி ஆணாதிக்கச் சமூகம் அங்கீகரிக்கும், நடைமுறையில் கடைப்பிடிக்கும் வழியை, மநு சாஸ்திரமும் உறுதிப்படுத்துகிறது. ஆனால், மாட்ரிலீனியல் தாய்வழி வாழ்வியல் முறையைக் கனவில்கூட அனுமதிக்காதது இச்சமூகம். அனுமதித்தால் தன் சவக்குழியை தானே வெட்டிக் கொள்வதற்கு சமமென்று ஆணாதிக்கம் அறிந்து வைத்திருக்கிறது.

'நிலத்தை, சொத்தைச் சிதையாமல் பாதுகாத்து, சமூகத்தில் அதிகாரத்தை மதிப்பை உறுதிப்படுத்தவும், பங்காளிகள் பிரிந்து, சொத்துக் கரைந்து தன் சந்ததிகள் பசியால் மடியக் கூடாது என்பதற்காகவும், பிறப்பு விகிதத்தைக் கட்டுப்படுத்தவும், ஒரு குடும்பத்தில் பிறந்த அண்ணன் தம்பிகள் அனைவருக்கும் ஒரு பெண்ணை திருமணம் செய்து வைக்கும் வழக்கம் இந்தியாவுக்குள் பஞ்சம் பிழைக்கக் கால்நடைகளுடன் கைபர்போலன் கணவாய் வழி நுழைந்த ஆரிய பார்ப்பன நாடோடிகளிடமிருந்திருக்கிறது. இதுவே பாலியட்ன்ரி வாழ்வியல் முறை. இவ்வழக்கத்தைச் சில சத்திரிய குழுக்களும் பிறகு சில பழங்குடி சமூகங்களும் பின்பற்றத் தொடங்கின' என்கின்றனர் ஆய்வாளர்கள். 'தாங்கள் சுத்தமான ஆரிய ரத்தமுடைய பாம்ரேனியன் பீரிடு நாய் போல் உயர்ந்த சாதி' என்று சமீபத்தில் பார்ப்பன மாநாட்டில் பேசிய ஹைப்ரீடு பாம்ரேனியன் வம்சாவழிகள் ஒரு பெண்ணை மணந்து வம்சத்தை வளர்த்த அண்ணன் தம்பிகளின் க்ராஸ் பிரீடுகள்தாம்.

ஒருவனுக்கு ஒருத்தி மோனோகமி வழக்கத்தின் உதாரணமாகச் சீதையும், ஐந்து சகோதரர்களுக்கு மனைவியாகும் பாலியன்ட்ரி வழக்கத்தின் உதாரணமாகத் துரௌபதையும்,

ஆண் பல பெண்களுடன் சேர்ந்து வாழ்ந்தாலும் மனைவி பதிவிரதா கடமை தவறக் கூடாதென்னும் பாலிகமி வழக்கத்தின் உதாரணமாகக் கண்ணகியும், பெண்களின் உதாரண வகைமையாக ஆணாதிக்கச் சமூகத்தால் உலவவிடப்பட்டிருக்கிறது. பெண்கள் தனித்துவமாக, போற்றத்தக்கவளாளப் பெயரெடுக்க அல்லது 'புனித' அடையாளமடைய, அவள் காப்பிய மணிமேகலையாகவோ அல்லது நவீன அன்னை தெரசாவாகவோ இருக்க வேண்டும். ஆண் பிரதிகளால் உருவாக்கப்பட்ட, கட்டமைக்கப்பட்ட, பெண் உடல்களின் மீது ஆண் விரும்பும் சமூக மதிப்பீடுகளைப் புகுத்தி உதாரண 'பெண்மை' அடையாளங்களால் முலாம் பூசி, சமூகத்தால் ஏற்றுக்கொள்ள வைக்கப்பட்டு, அவை சமூகபொதுஉளவியலாகவும் வளர்த்தெடுக்கப்பட்டது. சீதையையும் கண்ணகியையும் கொண்டாடும் அளவுக்கு பொது வழக்கில் துரௌபதையைக் கொண்டாடவில்லை என்றாலும், துரௌபதையும் ஆணாதிக்கப் பெண்குறியீட்டின் அடையாளம் என்பதால் சிறுதெய்வ வழிபாட்டுமுறைக்குள் வைத்து அங்கீகரித்திருக்கிறார்கள்.



சரித்திரத்தின் இம்மூன்று பெண்களும் ஆணாதிக்கச் சமூகத்தால் அடிமையாக்கப்பட்ட, ஒடுக்கப்பட்ட பெண் உடல்கள். ஆகவே, தொடர்ந்து ஆணாதிக்கச் சமூகம் எல்லாப் பெண்களையும் இவ்வகைமைக்குள் அடைக்கத் துடிக்கிறது. சீதை இராமனின் உடமை என்பதால்தான் தீக்குளிக்க கட்டளையிடுகிறான். சீதா இராமாயணங்கள் ஆண்பிரதியின் எதிர்பிரதியாகி இராமனின் புனிதப் பிம்பத்தைச் சிதைத்து இகழ்கின்றன என்றாலும், அவ்விளிம்புநிலைச் சொல்லாடலால் ஆணாதிக்க அதிகார மையத்தின் ஆன்மாவைத் துளைக்க முடியவில்லை. துரௌபதை தனது உடமை என்பதால்தான் தர்மன் சூதாட்டத்தில் ஈடாக வைத்துத் தோற்கிறான். கண்ணகி தனது உடமை, அவளுக்கு பதில் சொல்ல கடமைப்பட்டவன் இல்லை என்பதால்தான் மாதவியோடு சேர்வது மட்டுமல்லாமல், மாதவியும் அவனது உடமை என்பதால் அவளை சந்தேகித்து தண்டிக்க மாதவியை குழந்தையுடன் விட்டுவிட்டுப் பிரிகிறான் கோவலன். ஆனால், அடிமை கண்ணகியால் கோவலனை என்றுமே தண்டிக்க முடியவில்லை.

பெண்களின் பாலியல் செயல்பாட்டை வெளிப்படையாக பெண்கள் பேச அனுமதிக்காத சமூகத்தில், பெண்கள் பாலியல் சுதந்திரமில்லாமல் இருக்கிறார்கள் என்றாலும், திருமண உறவுக்குள் தான் வஞ்சிக்கப்பட்டதாகத் துரோக உறவுக்குள் சிக்கிவிட்டதாக கருதும் பெண், தன் பாலியல் தேவையை துணிந்து ரகசியமாக உருவாக்கிக் கொள்கிறாள். 'தாத்திரிக் குட்டிக்கதையும்' கமலாதாஸின் 'என்கதையும்' தற்கால உதாரணங்கள். கிராமத்தில் சதாரணமாக இவன் அவள் தொடுப்பு என்று இயல்பாகச் சொல்லிக் கடந்துவிடுவார்கள். திருமண உறவுக்கு வெளியே ஏற்படுத்திக்கொள்ளும் ஆணுறவை, தந்திரமாக கையாளத் தெரியாத, சாமர்த்தியமில்லாத விவரமற்றப் பெண்களே பிரச்சினையில் சிக்கி இங்கு பலியாக நேர்கிறது. பெண்களின் ஒட்டு மொத்த அரசியலையும் பேசாமல் வெற்றுப் பாலியல் சுதந்திர வேட்கை என்பது சுவருக்கு வெளியே துளிர்விடும் ஒரு கிளை போன்றது. சுவற்றைத் தகர்க்க சுவரிலேயே வேர்பிடிக்க வேண்டும்.

இந்தியா போன்ற நாடுகளில் குடும்பச் சமூக வன்முறையால் மூன்றில் ஒருபெண் பாதிக்கப்பட்டிருப்பதாக உலக மனிதவுரிமை ஆணையம் அறிக்கை தருகிறது. நிலவுரிமை, சொத்துரிமை, அதிகாரம் மறுக்கப்பட்ட பெண்கள் தாய்வழிச் சமூகமுறைக்குத் திரும்பிச் சென்று தங்கள் இழந்த அதிகாரத்தை மீட்டெடுக்கும் வழி தற்போதில்லை. முதல்படியாக, குடும்பமென்னும் மைக்ரோ நிறுவனத்தில், தமிழ் மரபாக கடைப்படிக்கப்படும் குடும்ப அமைப்பு முறையில், சிறு மாற்றத்தை உட்புகுத்தி குடும்ப வன்முறைகளை ஒருபாதியளவுக் குறைக்க முடியும்.

பெண் மணமுடித்து ஆண் வீட்டுக்கு செல்லும் வழக்கத்தை ஒழித்து, ஆண் பெண் வீட்டுக்கு வரும் மரபை உருவாக்கலாம். இதில் பெண் உடல் மீது ஆணுக்கும் அவன் குடும்பத்துக்குமிருக்கும் எல்லையற்ற அதிகாரம் குறைக்கப்படும். அவன் வீடு போல இங்கு பெண்ணின் வீட்டில் ஆண் தனது வரைமுறையற்ற அதிகாரத்தைச் செலுத்த முடியாது. பெண்களை ஆண்களால் அநாதையாக்கவோ வீட்டைவிட்டுத் துரத்தவோ முடியாது. பெண்ணிடம் பிரச்சினை செய்தால், பொறுப்பற்று நடந்தால், ஆண்தான் வெளியேற்றப்படுவான். ஆண் தவறு செய்தால் அவன் குடும்பத்தைவிட்டு வெளியேற்றப்படுவான் என்ற தன்னுணர்வே அவனை வழிநடத்தும் பெண்ணுக்கு மதிப்பளிக்கக் கற்பிக்கும்.

'என் தேவதைக்காக உலகத்தையே விலைக்கு வாங்குவேன், கட்டளையிட்டால் வானையே வில்லாய் வளைப்பேன், கேட்டால் உயிரையே கொடுப்பேன்' என்ற வசனமெல்லாம் பேசி ஏமாற்றியது போதும். கொஞ்சம் உங்கள் வீட்டை விட்டு வெளியே வாருங்கள் பார்க்கலாம், உங்களின் உயிருக்கு உயிரானவளுக்காக.

(தொடர்வோம்)

**மாலதி மைத்ரி**
**<anangufeministpublication@gmail.com>**

# ஸ்வர பேதங்கள்

சி. புஷ்பராணி

ஸ்வர பேதங்கள் - பாக்யலக்ஷ்மி; தமிழில்: கே.வி.ஷைலஜா; விலை ரூ. 250; வெளியீடு: வம்சி புக்ஸ், 19 டிஎம் சரோன், திருவண்ணாமலை - 606602, தொலைபேசி: +9194458 70995

பின்னணிக் கலைஞராக, நாற்பது வருட காலப் பணி என்பதிலிருந்து, பாக்கியலக்ஷ்மி வகிக்கும் வகித்த பொறுப்புக்களையும் அவர் பெற்ற விருதுகளையும் வரிசைக்கிரமமாக அறிமுகப்படுத்தும்போது, ஒருவித பிரமிப்பில் மூச்சு முட்டுகின்றது. இவ்வளவையும் பெறுவதற்கு அவர் கடந்து வந்த துன்பியல் பகுதிகளைப் படிக்கும்போது, நாமும் அதில் கரைந்து உடைந்து போகின்றோம்.

“பள்ளிக்கூடத்தில் படிக்கப்போகின்றேன்” என்று குதூகலத்துடன் பேருந்தில் தாயுடன் பயணம் செய்யும் சிறுமி பாக்கியலக்ஷ்மி, அநாதை ஆசிரமத்தில் அவரை விட்டுவிட்டுத் திரும்பிப் பாராமல் போய்விட்ட அம்மாவை எண்ணிக் கதறியது சோக சித்திரமாக விரிந்து மனதை வலிக்கப் பண்ணியது.

சகோதரனும் சகோதரியும் அங்கே இருப்பதை முதலில் அறிந்திராத, தாயின் அரவணைப்பை மட்டுமே அனுபவித்திருந்த சிறுமி பாக்கியலக்ஷ்மி அவர்களோடும் ஓட்டமுடியாமல், தாயின் ஏக்கத்துடனேயே பாலமந்திரில் வாழும்போதே ஒருவித அகங்காரம் துளிர்விட ஆரம்பிக்கின்றது. இதுவே பின்னாட்களில் தன்னம்பிக்கையையும் மன வலிமையையும் ஊட்டி, எட்டாத உயரத்துக்கு அவரைத் தூக்கிவிட்டிருக்கிறது.



ஐந்து வருட பாலமந்திர் வாழ்க்கைக்குப்பின், அண்ணனுடன் சென்னைக்கு, பெரியம்மாவின் வீட்டுக்கு வரும் சிறுமிக்கு மேலும் சோகம் காத்துக் கிடக்கின்றது. இதுவரை மலையாளத்தில் படித்த இருவருக்கும், தமிழ் மொழிக் கல்வி முதலில் சிரமத்தையே கொடுத்தது. ஆனாலும், சுதந்திர உணர்வும் மகிழ்ச்சியும் சிறுமி பாக்கியலக்ஷ்மியைத் தொற்றிக்கொள்கின்றது. இதுவும் நீடிக்கவில்லை.

பிஞ்சு வயதிலேயே இவர் படும் வயதுக்கு மீறிய துயரங்கள் வேதனையின் உச்சக்கட்டம். பெரிய தாயோடு வாக்குவாதப்பட்டு, அம்மாவும் பிள்ளைகளும் தனியே போனபின், வறுமையும் அம்மாவின் நோயும் சிறுமி பாக்கியலக்ஷ்மியைப் பாடாய்ப்படுத்துவதை விளக்கும் ஒவ்வொரு வரிகளும் எம்மைக் கலங்க வைப்பதை எப்படி விவரிப்பது?

*அம்மாவின் முகத்தையே பார்த்தபடி கட்டிலின் ஓரத்தில் படுத்து உறங்கிவிடுவேன். மணியடிக்கும் சத்தம் கேட்டு ஒவ்வொரு முறையும் திடுக்கிட்டு எழுவேன். ரொட்டியும் பாலும் கொண்டு வரும் வண்டியின் மணிச்சத்தம்தான் அது. ஒவ்வொரு நோயாளியின் கட்டிலுக்கு அருகிலும் வந்து, ஒரு டம்ளர் பாலும் ஒரு ரொட்டி பைக்கட்டும் தருவார்கள். அம்மா எதுவும் சாப்பிட மாட்டாள். நான் பாலைக் குடித்துவிட்டு, ரொட்டியை வீட்டுக்கு எடுத்துவருவேன். அம்மா மருத்துவ மனையில் சேர்ந்தபிறகு எல்லா இரவிலும் எனக்கும் அண்ணனுக்கும் ரொட்டிதான் இரவு உணவு.*

இப்படியாகப் பக்கத்துக்குப் பக்கம் நீளுகின்றன பாக்கியலக்ஷ்மியின் சுமக்கமுடியாத துன்பங்கள்.

தாயின் மரணத்துக்குப் பின் திரும்பவும் பெரிய தாயுடன் வந்து சேர்க்கின்றனர் அண்ணன் உண்ணியும் பாக்கியலக்ஷ்மியும். சினிமாத்துறையில் தொடர்புகொண்ட பெரியம்மாவின் மூலம் ஆரம்பத்தில் குழந்தை நடிகையாகவும், பின்னர் பின்னணிக் குரல் கொடுப்பவராகவும் தொடங்குகின்றது பாக்கியலக்ஷ்மியின் திரையுலகப் பிரவேசம். பிறகு வரும் நாட்களில் இவர் புகழ்மிக்கவராகத் திகழ்ந்ததற்கு பெரியன்னையே மூலமாகின்றார். அதிக கட்டுப்பாடுகள் நிறைந்த பெரிய தாயின் வளர்ப்பு ஆரம்பத்தில் கசந்தாலும், அதுவே தன்னை ஒழுங்கமைத்திருக்கின்றது என்பதையும் பாக்கியலக்ஷ்மி பல இடங்களில் நினைவு கூர்கின்றார்.

*என் வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும்போது, இன்று எனக்குள்ள ஆளுமையின் பாதி பெரியம்மாவால் நான் அடைந்ததே. ஒழுக்கமாய் என்னை வளர்ப்பதில் அவர் காண்பித்த உத்வேகம் என்னை இப்படி ஆளுமையுள்ளவளாக மாற்ற உதவியது. அன்றெல்லாம் எனக்குப் பெரியம்மா மீது கோபம் ஏற்பட்டாலும்கூட இன்று என் வாழ்க்கையில் அவருக்குள்ள பங்கு புரிகின்றது. கமலாட்சி என்ற என் பெரிதாயைக் குறித்துச் சரியாகச் சொல்லவில்லையானால் இந்த வாழ்க்கையும் புத்தகமும் முழுமையாகாது.*

இப்படித் தன் தாயைப் பற்றி நன்றி பகிர்கின்றார்.



இப்படியோர் ஆதரவும் வளர்ப்பும் இல்லையென்றால் இவரின் நிலைமை என்னவாகியிருக்கும் என்பதை எண்ணும்போது, உலகமெங்கும் கவனிப்பாரின்றி அவலமுடன் வாழும் பரிதாபத்துக்குரிய சிறுவர்கள் ஞாபகத்துக்கு வந்து மனதையுருக்கி வலி தருவதைத் தடுக்க முடியவில்லை.

அந்தப் பெரியம்மாவின், தேவையற்ற ஆடம்பரங்களை ஒதுக்கும் முறையும், பணத்தை பத்திரமாக வைத்திருந்து, சரியாகச் செலவழிக்கும் முறையும் என்போன்ற பலரும் கற்றுக்கொள்ள வேண்டிய விடயம். பாக்கியலக்ஷ்மி பணத்தாசை இல்லாதவர் என்பதை எப்போதும் கவனிக்கலாம். பின்னணிக் குரல் கொடுப்பதன் மூலம் சம்பாதிக்கும் பணத்தை முதலில் பெரிய தாயினிடமும் பின்னாளில் அப்படியே கணவனிடமும் கொடுத்துவிடுகிறார்.

தான் மணம் முடிக்க விரும்பியவரை மரணப்படுக்கையில் இருக்கும் பெரியம்மாவுக்கு அறிமுகப்படுத்துகின்றார். பெரியம்மாவுக்கு அந்த ஆளைக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. "இந்த ஆளை நீ மணந்தால் அது நீடிக்காது" என்பதுவே பெரிய தாய் இறுதியாகப் பேசிய வார்த்தைகள்.

பெரியம்மாவின் மறைவுக்குப் பின்னர், தனக்கு ஒரு துணை வேண்டும் என்ற மனநிலையில், திருமணப் பந்தத்துக்குள் விழும் பாக்கியலக்ஷ்மி சந்திக்கும் துயரங்களும் ஏமாற்றங்களும் என் வாழ்க்கையைக் கண்ணுக்குள் கொண்டு வந்து நானும் இருண்டு போகின்றேன். பாக்கியலக்ஷ்மியின் கதையைப் படிக்கும்போது என்னையே அதில் பார்ப்பதுபோல் பிரமை கொள்கின்றேன்.

அன்புக்காக ஏங்கும் இவருக்கு, அன்பில்லாத ஒருவன் கணவனாகக் கிடைத்தும், குடும்ப வாழ்க்கை சிதறக்கூடாது என்ற தவிப்பில் பல வருடங்களை வெறுமையாகக் கடக்கும் இவர் போன்ற (இதில் நானும் அடங்குகின்றேன்) பெண்களால்தான் ஆண்கள் தங்கள் சுயநலத்தை இறுக்கமாகக் கட்டமைக்கின்றார்கள்.

பிள்ளைகள் மீது துளியும், அன்பும் அரவணைப்பும் காட்டாத இவரின் கணவனை மிகவும் வெறுப்புடன் உணர்கின்றேன். பின்னணிக் குரல் கொடுப்பதன் மூலம் கொண்டுவரும் பணம் முழுவதையும் உதவாக்கரைக் கணவனிடம் கொடுத்துவிட்டு ஒன்றுமில்லாமல் வெறுங்கையுடன் நிற்கும் பாக்கியலக்ஷ்மி போன்றவர்கள் ஏராளம்!

ஒரு கட்டத்துக்கு மேல் பிள்ளைகளோடு தனியே வாழப் புறப்பட்ட பாக்கியலட்சுமிக்குப் பாராட்டுக்கள். அன்பில்லாத புகைமூட்டத்துக்குள் மூச்சுமுட்ட வாழும் கொடுமையை உதறி, நிம்மதிக் காற்றை உறிஞ்சுவது என்பது எத்துணை இன்பம் என்பது அனுபவித்தோருக்கே தெரியும்.

பாக்கியலட்சுமி மீது அன்பும் ஆதரவும் காட்டிய கணவனின் தந்தை இறந்தபோது, இவர் வடிக்கும் கண்ணீர் கொஞ்சமல்ல. தன்மீது அன்புகாட்டும் ஒவ்வொருவராகத் தன்னைவிட்டு நீங்குவதாகக் கவலைமிகக் கொள்கின்றார்.

"பதினைந்து வருடங்கள் உடன் வாழ்ந்தும்கூட ஒரு நிமிடமும் எனக்காய் அவரிடமிருந்து கசிந்ததில்லை" என்ற வரிகளினூடே இவரின் துயரம் கொப்பளிக்கின்றது. "நான் சாயும்போது தாங்கிக்கொள்ள யாருமில்லாததால், எல்லாவற்றையும் சகிக்கக்கூடிய உடல் உறுதியையும் மன அளவிலான பலத்தையும் நான் பெற்றிருந்தேன்" என்ற வரிகளில், உலகில் தனித்து உரமோடு வாழும் மொத்தப் பெண்களின் குரலாக என்னை வருடிச் செல்கின்றது பாக்கியலக்ஷ்மியின் குரல்.

பிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு வீட்டிலிருந்து இவர் வெளியேறியபோது வேலை ஒரு பலமாயிருந்தது. "இதுதான் எப்போதும் பெண் குழந்தைகளுக்கு முக்கியமானது. படிப்பும் வேலையுமிருந்தால் நம் தன்னம்பிக்கை வளரும். சுயமரியாதை தானாகப் பெருகும். யாரும் எம்மை மிதித்துப் புறந்தள்ள முடியாது." பாக்கியலக்ஷ்மியின் இந்த வார்த்தைகள் பெறுமதி மிக்கவை.

"சுதந்திரமாய் நான் இல்லாதுபோனதால், காதலின் சுகம் என்னவென்பதை ஒரு போதும் என்னால், புரிந்துகொள்ள முடிந்ததில்லை. சுதந்திரமாய் வாழ வாய்ப்புக் கிடைத்தபோது, பருவம் முடிந்திருந்தது" என்பது பாக்கியலக்ஷ்மியின் குரல் மட்டுமல்ல.

பிள்ளைகள் இருவரும், இவருக்கு எப்போதும் பக்கபலமாகவும் தாயை நன்கு புரிந்துகொண்டவர்களாகவும் இருந்தது இவரின் பெருமகிழ்வு. இந்நூலை எல்லோர் முன்னும் கொண்டு வந்ததுக்கும் இதுவே முதன்மையான பலமென்று குதூகலிக்கின்றார்.

"கொஞ்சம் யோசித்துப் பார்த்தால் யாரிடமிருந்தும் அன்பு நீடித்ததில்லை. விபரம் தெரியுமுன்னரே அப்பா இறந்து போயிருந்தார். என்னை பேணிக்காக்க வேண்டிய அம்மாவை, நான்தான் அம்மாவாகப்

பார்த்துக்கொண்டேன். அம்மாவும் என்னைவிட்டு போய்விட்டார். ஒரு போதும் சகோதர பாசமும் நீடிக்கவில்லை" என்று கலங்கும் இவர் அதனுள் மூழ்கிவிடவில்லை. துயரங்களை கடந்து முன்னேறும் துணிச்சலில் ஒரு போதும் பின்வாங்கியதில்லை.

கணவனை விட்டுப்பிரிந்தபின் நாற்பது வயதுக்குமேல் ஏற்படும் காதலையும் அதனால் அவருக்குள் உண்டாகும் மாற்றங்களையும் பாசாங்கில்லாமல் சொல்லும் விதம் அழகு! காதல் என்பது ஒருவரை எப்படியெல்லாம் மாற்றிவிடுகின்றது என்பதை ரசனையோடு இவர் வர்ணிப்பது அருமை.




இவரின் நட்பு வட்டமும் மிகப்பெரியது. பின்னணிக் குரல் கொடுப்பதன்மூலம், புகழும் அந்தஸ்தும் இவருக்குக் கிடைத்திராவிட்டால், இவ்வளவு நண்பர்கள் கிடைத்திருப்பார்களா என்று என்னுள் யோசிக்கின்றேன். காசு, பணம், புகழ், விருது என்று எல்லோரும் ஆலாய்ப் பறப்பதைக் காணும்போது, என்னுடைய இந்தக் கணிப்பிலிருந்து விலக முடியவில்லை.

தனியாகப் பிள்ளைகளை வளர்த்து ஆளாக்கும் வகையிலும் வெற்றியே கண்டுள்ளார். பின்னாளில் இவருக்கு உண்டாகும் காதலும், காதலன் திடீரென்று ஒதுங்கியதும் இவர் கொள்ளும் தொடர் சோகமும் வருத்தமுறச் செய்கின்றபோதிலும், அந்தக் காதலன் ஏன் விலகினான் என்ற கேள்வியும் எழாமலில்லை. பல வழிகளில் இவரை ஊக்குவித்து, உற்சாகப்படுத்திய ஒருவன், இலக்கிய ரசனையை இவருக்குள் வளர்த்து, இனிமையாகவே பழகியவன், ஏன் உறவை முறித்துக்கொண்டான்? இப்படிப் பல இடறுகின்றன.

"எல்லாவற்றையும் ஒளித்து வைக்காமல் எழுதுவதால்சிலருக்குவலிக்கலாம்.சிலவிரும்பப்படாத உண்மைகள் மற்றவர்களை வேதனைப்படுத்துமானால், அவற்றைச் சொல்லாமலிருக்கவும் முயன்றுள்ளேன்" என்று முன்னுரையில் இவர் குறிப்பிடும் வரிகள், இந்த இடத்தில் மனதில் புகுந்து விடுகின்றன.

பாக்கியலக்ஷ்மியிடம் இந்த நபர் ஏதோ ஒரு காரணத்தோடுதான் பழகியிருக்க வேண்டும். உண்மையான காதலோடு பழகிய ஒருவன் இப்படிப் பட்டென்று விலகமாட்டான். இப்படிப் பல ஆண்கள் பகிரங்கமாகவே தமது இத்தகைய உறவுகளை வெளிக்காட்டாமல் பழகிவிட்டுக் கழன்றுகொள்வதை இன்னும் பார்த்துக்கொண்டுதான் இருக்கின்றோம்.

டப்பிங் துறையில் நாற்பது வருடங்களுக்கு மேல் பணிபுரிந்த இவரின் அனுபவத்தினூடாக இந்தத் துறைபற்றி இவர் விவரித்துக்கொண்டே போவது மிக அற்புதம்! டப்பிங் துறையில் மேல் நாட்டுச் சினிமாக்களுக்கும் இந்தியச் சினிமாத்துறைக்கும் இடையிலான வித்தியாசங்களை ஆழ்ந்து அலசும் இவரின் கூரிய கண்ணோட்டம் மிகச்சிறப்பு.ஒருவித ஆச்சரியத்தையும் இதன்மூலம் அறிகின்றேன்.

பின்னணிக் குரல் கொடுப்பதென்றால், ஒலிவாங்கியின் முன்னால் நின்று, வசனங்களை ஏற்ற இறக்கத்துடன் பேசிவிட்டுச் செல்வது என்றுதான் நான் நினைத்திருந்தேன். ஓடிக்கொண்டே வசனம் பேசுவது, நின்ற நிலையில் ஓடிக்கொண்டே பேசுவது, குடித்துவிட்டுப் பேசவேண்டிய வசனங்களை எதையாவது குடித்துக்கொண்டே பேசுவது, அதுபோல் சாப்பிட்டுக்கொண்டே பேச வேண்டியவைகளை எதையாவது சாப்பிட்டுக்கொண்டே பேசவேண்டும் என்பதையும் இன்னும் பல நுணுக்கங்களையும் இப்புத்தகத்தைப் படித்தபின்னரே விளங்கிக்கொண்டேன். தன் கதையைச் சொல்ல வந்தவர், டப்பிங் துறை பற்றி நிறையவே விளக்கங்கள் தந்து தொழில் மீது தான் கொண்ட தீராக்காதலை வெளிப்படுத்திவிட்டார்.

முழு புத்தகத்தையும், சிறிய சலிப்புக்கூட வராமல் ஒன்றிப் படித்தேன். தன்னை ஒரு கட்டுக்கோப்புக்குள் வைத்து வாழ்ந்ததால், விரசமாக எதையும் இவர் எங்கும் குறிப்பிடவில்லை. மிக இயல்பாகவே சொல்லிக்கொண்டு போகின்றார்.

ஆளுமையான புகழ் பூத்த பெண்கள் பலரும் கணவர்களால் பல வதைகளுக்கு ஆளானவர்கள். அதனாலேயே விவாகரத்தும் பெற்றவர்கள் என்பது பற்றி ஆழமாக யோசிக்கின்றேன். இதில் மேலை நாட்டுப்பெண்களும்விதிவிலக்கல்ல.இந்தபெண்களை அடக்கி வைக்காவிட்டால் எம் தலைக்கு மேல் ஏறி அமர்ந்துவிடுவார்கள் என்ற ஆண் மமதையும், தாழ்வு மனப்பான்மையும்ஒன்றுசேர்ந்துஉச்சாணிக்கொம்பில் ஏறிவிடும்போது சன்னதம் கொள்ளும் ஆண்கள் மனைவிமாரைக் கொடுமைப்படுத்துவதில் கைதேர்ந்து விடுகின்றார்கள். இத்தகைய கொடுமைகளைத் தகர்த்துக்கொண்டு வெளியேறும் பெண்களுக்கு ஏற்படும் ஓர்மம் அவர்களுக்குள் பதுங்கியிருந்த ஆளுமையை வெளிக்கொண்டு வருகின்றது.

குடும்ப அமைப்புசிதறக்கூடாதுஎன்று ஆரம்பத்தில் பாக்கியலக்ஷ்மி தயங்கிய மாதிரி, அதிகமான பெண்கள் தங்கள் திறமைகள் அனைத்தையும் ஒதுக்கி வைத்துவிட்டுச்சித்திரவதைகளைத்தாங்கிக்கொண்டே தம்வாழ்நாட்களைத்துயரத்தோடுமுடித்துக்கொள்வது பெரும் சோகம்!

உயிர்த் துடிப்புடன் கதைசொல்லும் சிறப்பும் பிசிறில்லாத மொழிபெயர்ப்பும் நிறுத்தாமல் படிக்கும் ஆவலை நீட்டிக்கொண்டே போவது இந்நூலின் தனிச்சிறப்பு! ●

**சி. புஷ்பராணி <ranisithampari@gmail.com>**

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.120/-




விலை ரூ.100/-




விலை ரூ.140/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.150/-




விலை ரூ.120/-

**அம்ருதா பதிப்பகம்**

அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு,
மூன்றாவது பிரதான சாலை,
சி.ஐ.டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035.
அலைபேசி: 94440 70000

# சத்தியத்தின் ஆட்சி

பாவண்ணன்

1921ஆம் ஆண்டில் காந்தியடிகள் மதுரைக்கு வந்திருந்தார். அப்போது டி.வி. சுந்தரம் ஐயங்காரின் மனைவி இலட்சுமி அம்மையாரின் தலைமையில் இயங்கி வந்த 'இந்து மாதர் சபை' இராட்டையில் நூல்நூற்கும் பணிகளிலும் கதர் பணிகளிலும் ஈடுபட்டு வந்தது. ஒருநாள் அந்த அமைப்பில் நடைபெற்ற பிரார்த்தனைக் கூட்டத்தில் கலந்துகொள்வதற்காக காந்தியடிகள் வந்திருந்தார். நிகழ்ச்சியின் இறுதியில் இலட்சுமி அம்மையாரின் பணிகளைப் பாராட்டிய காந்தியடிகள், "தேச சேவைக்காக உங்கள் குடும்பத்தின் சார்பில் என்ன செய்யப்போகிறீர்கள்?" என்று கேட்டார். மறுகணமே இலட்சுமி அம்மையார், "எனக்கு எட்டுக் குழந்தைகள். அவர்களில் என் மகளை தேசப்பணிக்காக வழங்குகிறேன்" என்று தயக்கமின்றி பதில் சொன்னார். அதைக்கேட்டு புன்னகையுடன் அவருக்கும் அவருடைய மகளுக்கும் ஆசிகளை வழங்கிவிட்டு புறப்பட்டுச் சென்றார் காந்தியடிகள். காந்தியடிகளின் ஆசிகளைப் பெற்ற அந்த இளம்பெண்ணின் பெயர் செளந்திரம். பிற்காலத்தில் அம்மா என அனைவராலும் அன்புடன் அழைக்கப்பட்டவர்.

கொடுத்த வாக்குறுதிக்கிணங்க தன் மகளை சமூகப்பணிகளில் ஈடுபடச்செய்து ஊக்கப்படுத்தினார் இலட்சுமி அம்மையார். கள்ளுக்கடை மறியல், அயல்நாட்டுத் துணிமணிகள் எதிர்ப்பு போன்ற போராட்டங்களில் செளந்திரம் நேரிடையாகவே பங்கெடுத்துக்கொண்டார். செளந்திரம் பல இளம்தொண்டர்களோடு ஊர்வலமாக வீடுவீடாகச் சென்று பலரையும் சந்தித்து அயல்நாட்டுத்துணிகளைப்பெற்றுக்கொண்டு கதராடைகளை வழங்கினார். பிறகு திரட்டிய எல்லா ஆடைகளையும் பொதுமக்களின் பார்வை படும் இடங்களில் குவிக்கப்பட்டு தீயிடப்பட்டது. மேலும், அவர்கள் முக்கியமான துணிக்கடைகளின் முன்னால் நின்று அயல்நாட்டுத் துணிகளை விற்பனை செய்யவேண்டாமென கடைக்காரர்களிடமும், வாங்கவேண்டாமென வாடிக்கையாளர்களிடமும் சொல்லித் தடுத்தனர். இதனால் பல கடைகள் மூடப்பட்டன.



தினந்தோறும் பெண்கள் இப்படி ஊர்வலமாக வந்துபோவதால் போக்குவரத்துப் பிரச்சினையும் சட்ட ஒழுங்குப் பிரச்சினையும் ஏற்படுவதாக கடைக்காரர்கள் காவல்துறையில் புகாரளித்தனர். ஒருநாள் காவல்துறையினர் ஊர்வலத்தை நிறுத்தி கலைந்துபோகும்படி ஆணையிட்டனர். அதற்குக் கட்டுப்பட மறுத்து தொடர்ந்து அஞ்சாமல் தேசியப் பாடல்களையும் பாரதியார் பாடல்களையும் பாடிக்கொண்டு ஊர்வலமாகச் சென்றவர்களை காவல்துறையினர் கட்டாயப்படுத்தி நிறுத்தினர். முதல் வரிசையில் நின்றிருந்தவர்களை விட்டுவிட்டு ஏராளமான பெண் தொண்டர்களைக் கைது செய்து வாகனங்களில் ஏற்றிச் சென்றார்கள். ஊருக்கு வெளியே வெகுதொலைவில் ஆளரவமற்ற ஒதுக்குப்புறமான இடத்தில் அவர்களின் ஆடைகளைக் களைந்து துரத்தியடித்து கொடுமைப்படுத்தினார்கள். அருகிலிருந்த சிற்றூரைச் சேர்ந்த பெண்கள் ஓடோடி வந்து அவர்களுக்கு உதவிசெய்து காப்பாற்றினார்கள்.

சமூகத்தொண்டையே உயிர்மூச்சாகக்கொண்டிருந்த செளந்திரத்தின் தனிப்பட்ட வாழ்க்கை மகிழ்ச்சியான தொடக்கத்துடன் அமையவில்லை. இளமைப் பருவத்தில் தொடக்கத்திலேயே அவருக்குத் துயரம் காத்திருந்தது. 1918ஆம் ஆண்டில் 12 வயதிலிருந்த அவருக்கும் ஐயங்காரின் சகோதரி மகனான பதினைந்து வயது நிரம்பிய செளந்தரராஜனுக்கும் மதுரையில் திருமணம் நடைபெற்றது. இண்டர்மீடியட் படித்து முடித்துவிட்டு ஆசிரியராகப் பணியாற்றி வந்த மணமகனுக்கு சென்னை மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைத்தது. புதுமணத் தம்பதிகள் இருவரும் சென்னைக்குச் சென்றார்கள். செளந்தரராஜன் கல்வியில் சிறந்து விளங்கினார். 1922ஆம் ஆண்டில் அவர்களுக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. சிறுவயதிலேயே தாய்மையடைந்ததால் குழந்தைக்கு உடல்வளர்ச்சியில் சில சிக்கல்கள் இருந்தன. எட்டு மாதங்களிலேயே அனைவரையும் துக்கத்தில் ஆழ்த்திவிட்டு அக்குழந்தை இந்த உலகைவிட்டு மறைந்தது.

செளந்திரத்தை மதுரையில் அவருடைய பெற்றோரின் வீட்டிற்கு அழைத்துவந்து விட்டுவிட்டு சென்னைக்குத் திரும்பி படிப்பில் மூழ்கினார் செளந்தரராஜன். 1923ஆம் ஆண்டில் கல்லூரியிலேயே சிறந்த மாணவராகத் தேர்ச்சி பெற்றார். அதைத் தொடர்ந்து மதுரை அரசு மருத்துவமனையில் உதவி மருத்துவராக பணியிலமர்ந்தார். அடிப்படையிலேயே சேவை மனப்பான்மை கொண்டிருந்த இளைஞர் தன் அயராத உழைப்பினால் அனைவருடைய நன்மதிப்புக்கும் உரியவராக விளங்கினார். 1925ஆம் ஆண்டில் நகரெங்கும் பரவிய பிளேக் நோயினால் பாதிப்படைந்தவர்களுக்கு மருத்துவம் செய்து பிழைக்க வைத்தார். ஓர் அறுவை சிகிச்சையின்போது அவர் அணிந்திருந்த கையுறையில் கண்ணுக்குத் தெரியாத சின்னஞ்சிறு பொத்தலின் வழியாக நுழைந்துவிட்ட பிளேக் நோய்க்கிருமி அவரைத் தாக்கியது. நோயாளி பிழைத்துவிட, மருத்துவம் பார்த்த மருத்துவர் இறந்துவிட்டார். தன் உயிர் பிரிவதற்கு முன்பாக



வழங்கிய காந்தியடிகளின் வழியில் தன் வாழ்க்கையை அமைத்துக்கொள்வதில் அவர் மிகவும் நாட்டம் கொண்டிருந்தார்.

காந்தியடிகளின் நிர்மாணப் பணிகளால் ஈர்க்கப்பட்ட பல இளைஞர்கள் இந்தியாவின் பல பகுதிகளிலிருந்து வந்து சேவா கிராமத்தில் தங்கி காந்தியடிகளிடம் பயிற்சி பெற்றனர். அவர்களில் திருவனந்தபுரத்தைச் சேர்ந்த இளைஞரான இராமச்சந்திரனும் ஒருவர். சாந்தி நிகேதனில் உயர்கல்வி கற்றவர். அப்போது அரிசன சேவா சங்கத்தின் மாநாடு ஒன்று தில்லியில் நடந்தது. அதில் கலந்துகொள்ள காந்தியடிகளும் மற்ற தலைவர்களும் தில்லிக்கு வந்தார்கள். இராமச்சந்திரனும் வந்திருந்தார். வழக்கம்போல காந்தியடிகளைச் சந்திப்பதற்காக சுசிலா நய்யாருடன் செளந்திரமும் வந்தார். சுசிலா நய்யார் தனக்குத் தெரிந்த அனைவரிடமும் செளந்திரத்தை அறிமுகப்படுத்தி வைத்தார். அப்போதுதான் இராமச்சந்திரனும் செளந்திரமும் முதன்முறையாக சந்தித்துக்கொண்டார்கள். இருவருடைய எண்ண அலைவரிசையும் ஒன்றுபோலவே இருப்பதை பேசிப்பேசி புரிந்துகொண்டார்கள். அடுத்தடுத்து பல காங்கிரஸ் கூட்டங்களிலும் சொற்பொழிவு மன்றங்களிலும் இருவரும் சந்தித்துக்கொண்டார்கள்.

1936ஆம் ஆண்டில் மருத்துவக் கல்லூரியில் முதல் மாணவியாகத் தேர்ச்சிபெற்றார் செளந்திரம். சென்னையில் தன் சகோதரரின் உதவியோடு ஒரு மருத்துவமனையை நிறுவி பணியாற்றத் தொடங்கினார். இதே தருணத்தில் தமிழ்நாடு அரிசன சேவா சங்கத்தின் செயலாளராக நியமிக்கப்பட்ட இராமச்சந்திரனும் சென்னைக்கு வந்து சேர்ந்தார். இருவரும் சென்னையிலேயே இருந்ததால் அடிக்கடி சந்தித்து உரையாடி மகிழ்ந்தார்கள். இராமச்சந்திரன் ஏராளமான புத்தகங்களை செளந்திரத்துக்காகக் கொண்டுவந்து கொடுத்து படிக்கும்படி செய்தார்.

1938ஆம் ஆண்டில் மதுரை அரசு மருத்துவமனையில் கௌரவ உதவி மருத்துவராகப் பணியாற்றக் கிட்டிய அழைப்பை ஏற்று செளந்திரம் மதுரைக்குச் சென்றார். மதுரை நகரின் முதல் பெண் மருத்துவராக அவர் அங்கே பணியாற்றினார். இராமச்சந்திரனும் செளந்திரமும் திருமணம் செய்துகொள்ள விரும்பினர். ஆயினும் செளந்திரத்தின் பெற்றோர் மகளுடைய மறுமணத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அந்தச் செய்தியை அறிந்துகொண்ட இராஜாஜியும் தக்கர்பாபாவும் இருவருக்கும் திருமணத்தை நடத்திவைக்கும்படி கேட்டுக்கொண்டனர். ஆனால், செளந்திரத்தின் பெற்றோர் தம் முடிவில் உறுதியாக இருந்தனர்.

செளந்திரமும் இராமசந்திரனும் சேவா கிராமத்துக்குச் சென்று காந்தியடிகளைச் சந்தித்து தம் விருப்பத்தைத் தெரிவித்தார்கள். அவர்களிடம்

மனைவியை அருகில் அழைத்து, எதிர்காலத்தில் வீட்டுக்குள் அடைந்துகிடந்து வாழ்க்கையை வீணடித்துவிடக் கூடாதென்றும், தொடர்ந்து படித்து மருத்துவராகி சமூகசேவை செய்ய வேண்டும் என்றும், மறுமணம் செய்துகொள்ளவேண்டுமென்றும் சொல்லிவிட்டு கண்களை மூடினார்.

ஒருமுறை சுதந்திரப் போராட்ட வீர்ரான சுப்பிரமணிய சிவா, செளந்திரத்தின் தந்தையைச் சந்திப்பதற்காக வீட்டுக்கு வந்தார். இளம்விதவையாக வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்த செளந்திரத்தைக் கண்டதும் பள்ளிக்கு அனுப்பி கல்வியைத் தொடரச் செய்யும்படி கேட்டுக்கொண்டார். அது அவருடைய வாழ்க்கையிலேயே பெரிய திருப்புமுனை. 1930ஆம் ஆண்டில் இண்டர்மீடியட் முடித்து தில்லியில் உள்ள லேடி ஹார்டிஞ்ச் மருத்துவக் கல்லூரியில் மருத்துவம் படிக்கத் தொடங்கினார். அப்போது அவருடைய கல்லூரித்தோழியாக விளங்கியவர் சுசிலா நய்யார். கல்லூரி வளாகத்திலும் அவருடைய சேவை தொடர்ந்தது. இருவரும் இணைந்து கல்லூரிகளிலும் விடுதிகளிலும் பணிபுரிந்து வந்த கடைநிலை ஊழியர்களுக்கும் அவர்களுடைய பிள்ளைகளுக்கும் மாலை வகுப்புகள் நடத்தி கல்வியறிவை ஊட்டினர். காந்தியடிகள் தில்லிக்கு வரும்போதெல்லாம் அவரைச் சந்திக்கச் செல்லும் சுசிலா நய்யாருடன் சேர்ந்து செளந்திரமும் சென்று உரையாடி மகிழ்ந்தார். இளமையில் தனக்கு ஆசி

விரிவாகப் பேசிய காந்தியடிகள் இறுதியில் அவர்களுடைய திருமணத்தை ஆதரித்தார். இராமச்சந்திரனும் சௌந்திரமும் திருமணம் செய்துகொள்ள விரும்புவதாக தன்னிடம் சொன்னதாகவும் இவர்களுடைய திருமணத்தை உடனடியாக நடத்திவைக்க வேண்டுமென்றும் குறிப்பிட்டு சுந்தரம் ஐயங்காருக்கு நீண்டதொரு கடிதம் எழுதினார், காந்தி. ஒருவேளை குறிப்பிட்ட காலத்துக்குள் அவர் அத்திருமணத்தை நடத்திவைக்கவில்லையெனில் தானே முன்னின்று நடத்தப்போவதாகவும் குறிப்பிட்டிருந்தார். அக்கடிதத்தைக் கண்டபிறகுகூட சௌந்திரத்தின் தந்தையார் மனம் மாறவில்லை. தன் முடிவில் பிடிவாதமாகவே இருந்தார்.

வேறு வழியின்றி இருவரும் சேவாகிராமத்தை அடைந்தார்கள். குறிப்பிட்ட காலம் கடந்தபிறகு, 02.11.1940 அன்று காந்தியடிகளே தலைமை தாங்கி இருவருக்கும் எளிய முறையில் திருமணத்தை நடத்தி வைத்தார். காந்தியடிகள் தான் நூற்ற நூலிலிருந்து நெய்யப்பட்ட வேட்டியை மணமகனுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். தான் நூற்ற நூலிலிருந்து நெய்யப்பட்ட புடவையை மணமகளுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார் கஸ்தூர்பா. அவையே மணமக்களின் முகூர்த்த ஆடைகள். பிறகு, காந்தியடிகள் இராட்டையில் தானே நெய்த நூலிலிருந்து தயாரிக்கப்பட்ட மாங்கல்ய நாணில் மஞ்சள் தடவிக் கொடுக்க, அதை வாங்கி மணமகளுக்கு அணிவித்தார் இராமச்சந்திரன். காந்தியடிகள், கஸ்தூர்பா இருவருடைய ஆசிகளோடு திருமணம் இனிதே நடந்து முடிந்தது. சேவாகிராம ஊழியர்கள் அனைவரையும் அத்தருணத்தை மகிழ்ச்சியோடு கொண்டாடும்படியும் அன்று நண்பகல் உணவோடு அனைவருக்கும் பாயசம் வழங்கப்படும் என்றும் அறிவித்தார் காந்தியடிகள்.

திருமணம் முடிந்ததும் ஓரிரு நாட்களில் இருவரும் சென்னைக்குத் திரும்பினார்கள். சென்னையில் சமூகப் பணியாற்றி வந்த டாக்டர் முத்துலட்சுமி ரெட்டியோடு இணைந்து கிராம மருத்துவச் சேவையில் ஈடுபட்டார் சௌந்திரம். இராமச்சந்திரன் இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆங்கிலத் தினசரியில் ஆசிரியராக வேலையில் இணைந்தார். இருவருடைய இல்வாழ்க்கையும் இனிதே தொடங்கியது. சிறிது காலம் சென்னையில் இருந்துவிட்டு பிறகு திருவனந்தபுரம் சென்றனர். தைக்காடு என்னும் இடத்தில் 'சாந்தி கிளினிக்' என்னும் பெயரில் ஒரு மருத்துவமனையைத் தொடங்கி ஏழை எளியவர்களுக்கு மருத்துவச் சேவை செய்யத் தொடங்கினார் சௌந்திரம். மேலும், அப்பகுதி மக்களுக்கு இராட்டையில் நூல் நூற்கக் கற்றுக்கொடுத்து தேசப்பற்றை ஊட்டினார்.

1942ஆம் ஆண்டில் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்தை காந்தியடிகள் தொடங்கியபோது, திருவனந்தபுரத்தில் இராமச்சந்திரன் மக்களைத் திரட்டி போராட்டம் நடத்தியதற்காக திருவிதாங்கூர் அரசு அவரைக் கைது செய்து சிறையிலடைத்தது. கணவர் கைது செய்யப்பட்டதால் போராட்டத்தில் தொய்வு விழுந்துவிடக்கூடாதென நினைத்த சௌந்திரம் வீடுவீடாகச் சென்று தொண்டர்களைச் சந்தித்து ஊக்கமளித்து தொடர்ச்சியாக போராட்டங்கள் நிகழும்படி செயலாற்றினார். இதையறிந்த அரசு அவரைக் கைது செய்து இனி சமஸ்தானத்தின் எல்லைக்குள் நுழையக்கூடாதென்ற எச்சரிக்கையோடு எல்லைக்கு மறுபகுதியில் உள்ள செங்கோட்டையில் விடுவித்தது.

சென்னைக்குத் திரும்பிய சௌந்திரம் மருத்துவக் கல்லூரியில் சேர்ந்து மகப்பேறு மருத்துவத்தில் பட்டயப் படிப்பைப் படித்து முடித்தார். முத்துலட்சுமி ரெட்டியுடன் சேர்ந்து ஔவை கிராம மருத்துவச் சேவை மையத்தைத் தொடங்கி அக்கம்பக்கத்தில் உள்ள கிராமங்களுக்குச் சென்று சேவை செய்தார். இரவில் அரிக்கேன் விளக்கை ஏந்தியபடி சென்று வைத்தியம் பார்த்துவிட்டுத் திரும்பி வருவார். கிராமத்துப் பெண்களுக்கு இராட்டையை அறிமுகப்படுத்தி நூல்நூற்கக் கற்றுக்கொடுத்து வருமானத்துக்கொரு வழியையும் உருவாக்கிக்கொடுத்தார். சிறியவர்களுக்கும் முதியோர்களுக்கும் கல்வி புகட்டும் வகையில் இரவுப் பள்ளிகளைத் தொடங்கி நடத்தினார்.

ஆகாகான் மாளிகை வளாகத்தில் சிறை வைக்கப்பட்டிருந்த மகாதேவ தேசாயும் கஸ்தூர்பாவும் எதிர்பாராத விதமாக மறைந்துபோனார்கள். அப்போது காந்தியடிகளுக்கு 75 வயது. அதையொட்டி 75 லட்சரூபாயை நிதியாகத் திரட்டி அவரிடம் அளிப்பதென தேசத்தலைவர்கள் முடிவு செய்தனர். ஆனால், இம்முடிவு காந்தியடிகளுக்குத் தெரியாது. கஸ்தூர்பாவின் மறைவையொட்டி முதன்முறையாக காந்தியைச் சந்திப்பதற்காக தலைவர்கள் அனுமதிக்கப்பட்டனர். அத்தருணத்தில்தான் காந்தியடிகளிடம் தேசியநிதி பற்றிய விவரம் தெரிவிக்கப்பட்டது. அதைக் கேட்டதும் காந்தியடிகள் ஓர் ஆலோசனை கூறினார். திரட்டப்படும் தொகையைக் கொண்டு அன்னை கஸ்தூர்பா நினைவாக ஓர் அமைப்பை நிறுவலாம் என்றும் அதன் மூலமாக கிராமப் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் கல்வி, மருத்துவம், தொழில் போன்ற துறைகளில் சேவை செய்யலாமென்றும் கூறினார். அதை உடனடியாக தலைவர்கள் ஏற்றுக்கொண்டனர்.

75 லட்ச ரூபாயை இலக்காகக் கொண்டிருந்தாலும் இறுதியில் 125 லட்ச ரூபாய் திரட்டப்பட்டது. 1944ஆம் ஆண்டு காந்தியடிகளின் பிறந்தநாளில் அத்தொகை அவரிடம் அளிக்கப்பட்டது. அன்றே 'கஸ்தூர்பா காந்தி தேசிய நினைவு நிதி அமைப்பு' உருவானது. அமைப்பின் பணிகளையும் விதிகளையும் காந்தியடிகளே வரையறுத்தார்.

பெண்கள் தொடர்பான வேலைகளை பெண்களே செய்யவேண்டும் என்பது காந்தியடிகளின் விருப்பம். அதனால் நிதிநிர்வாகப் பொறுப்பை சமூகசேவையில் நாட்டமுள்ள பெண்களிடமே அளிக்கவேண்டுமென அவர் நினைத்தார். நாடெங்கும் உள்ள இளம் விதவைகளும் கணவனால் கைவிடப்பட்ட பெண்களும் முதல்நிலைப் பயனாளிகளாக இருக்கவேண்டுமென அவர் நினைத்தார். அந்த அமைப்பு முதலாவது ஆண்டில் கிராமக் கிளைகளின் முழுச்செலவையும் இரண்டாவது ஆண்டில் முக்கால் பங்கு செலவையும் மூன்றாவது ஆண்டில் பாதிச் செலவையும் நான்காவது




ஆண்டில் கால்பங்கு செலவையும் ஏற்றுக்கொள்ளும். இந்த நான்காண்டு இடைவெளியில் எல்லா அமைப்புகளும் தம் காலில் தாமே நிற்கும் அளவுக்கு வலிமைகொண்டதாக ஆகவேண்டும். அதையே வளர்ச்சியின் அளவுகோலாக காந்தியடிகள் கருதினார். இந்தப் பொறுப்பை ஒவ்வொரு மாகாணத்திலும் தகுதிமிக்க ஒருவரிடம் ஒப்படைக்க, நாடெங்கும் உள்ள தலைவர்களிடம் பரிந்துரைகளைக் கேட்டார். சென்னை மாகாணத்தின் பொறுப்பு சௌந்திரத்தைத் தேடி வந்தது. மற்ற மாகாணங்களில் சுசேதா கிருப்ளானி, யசோதரம்மா தாசப்பா, துர்க்காபாய், சுசிலாபாய், அமல் பிரபதாஸ், ரமாதேவி சௌத்ரி போன்ற திறமைமிக்க சேவகிகள் நியமிக்கப்பட்டார்கள்.

காந்தியடிகளின் ஆசியுடன் மாகாணப் பிரதிநிதியாகப் பொறுப்பேற்றவுடன் சௌந்திரம் மாகாணமெங்கும் சுற்றுப்பயணம் செய்து இளம்விதவைகள், கணவனால் கைவிடப்பட்ட பெண்கள், ஏழை அரிசனப் பெண்கள், நாட்டு விடுதலைக்காக தியாகம் செய்த தியாகிகளின் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள், திக்கற்ற பெண்கள் என முப்பது பேர்களைத் தேர்ந்தெடுத்தார். பயிற்சி நிலையம் செயல்படுவதற்கு வசதியாக உடனடியாக திருவான்மியூரைச் சேர்ந்த ஒரு கிராம முன்சீப் தனது வீட்டையே வழங்கினார். சொந்தக் கட்டடம் உருவாகும் முன்பே பயிற்சி நிலையம் செயல்படத் தொடங்கியது.

பயிற்சி நிலையத்தில் இருவகையான பாடத்திட்டங்களை சௌந்திரம் வகுத்தார். ஒன்று கிராம சேவிகா பயிற்சி, மற்றொன்று ஆரோக்கிய சேவிகா பயிற்சி. காலைமுதல் மதியம் வரை வகுப்புகள். கிராம முன்னேற்றம், கிராமியக் கல்வி, தொழிற்கல்வி, மருத்துவம், வரலாறு, பொருளாதாரம், பண்பாடு, சுகாதாரம் போன்ற பாடங்கள் நடைபெற்றன. மாலை வேளைகளில் கிராமங்களில் உள்ள தெருக்களைக் கூட்டிச் சுத்தம் செய்வது, கழிவுகளை அப்புறப்படுத்துவது, வீடுவீடாகச் சென்று குழந்தைகளைக் குளிக்கவைப்பது, புண்களுக்கும் காயங்களுக்கும் மருந்து போடுவது போன்ற வேலைகளில் ஈடுபடுத்தப்பட்டார்கள். பயிற்சி நிலையத்துக்குச் சொந்தமான இடத்தில் காய்கறித் தோட்டமும் கீரைத் தோட்டமும் பருத்தித் தோட்டமும் ஏற்படுத்தப்பட்டு, அவற்றையும் பெண்களே பராமரித்து வந்தார்கள்.

ஒருபுறம் கிராமசேவைப் பயிற்சியை வழங்கியபடியே சௌந்திரம் சென்னையைச் சுற்றியிருந்த பாலவாக்கம், கோவளம், தாம்பரம், ஆலந்தூர், ஆதம்பாக்கம், அரும்பாக்கம் போன்ற கிராமங்களில் மருத்துவச் சேவை மையங்களை ஏற்படுத்தி சேவை செய்துவந்தார். பயிற்சியாளர்களுக்கு செவிலியர் பயிற்சியும் வழங்கப்பட்டது. ஓராண்டுப் பயிற்சியின் முடிவில் காந்தியடிகள் 1946ஆம் ஆண்டில் இந்தி பிரச்சார சபா பட்டமளிப்பு விழாவில் கலந்துகொள்வதற்காக சென்னைக்கு வந்திருந்தார். அப்போது சௌந்திரம் தம் நிலையத்தில் பயிற்சி பெற்ற எல்லாப் பெண்களையும் காந்தியடிகளுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அப்போது பயிற்சி நிறைவுச் சான்றிதழ்களை காந்தியடிகளே கையெழுத்திட்டு வழங்கினார். பயிற்சி நிலையத்தின் செயல்பாடுகளைக் கேட்டறிந்த காந்தியடிகள் மிகவும் மகிழ்ச்சியுற்றார். கஸ்தூர்பா நிதியின் கீழ் முதன்முதலாக பயிற்சியாளர்களைத் தேர்ந்தெடுத்து பயிற்சியையும் வெற்றிகரமாக நிறைவு செய்தவர் என்கிற வகையில் சௌந்திரத்தைப் பாராட்டி அன்னை கஸ்தூர்பா காந்தியின் திருவுருவப் படத்தை அன்பளிப்பாக அளித்தார். மேலும், சென்னையைக் கடந்து கிராமப்புறங்களுக்குச் சென்று நிதிப்பணிகளைச் செய்யுமாறு ஆலோசனையும் வழங்கினார்.

காந்தியடிகளின் சொற்களை இறைவனின் ஆணையாக எடுத்துக்கொண்ட சௌந்திரம், தமிழகம் முழுதும் அலைந்து அறுபது மையங்களை சேவை உருவாக்கினார். எல்லா இடங்களிலும் கிராம சேவிகா பயிற்சியும் ஆரோக்கிய சேவிகா பயிற்சியும் வழங்கப்பட்டன. பயிற்சி பெற்றவர்கள் மையத்துக்கு அருகிலுள்ள கிராமங்களுக்குச் சென்று மருத்துவம், சுகாதாரம், குழந்தைகள் நலன், கல்வி போன்ற பல்வேறு பணிகளைச் செய்தனர். ஓட்டைக் குடிசைகளில் உயிருக்காகப் போராடிய எத்தனையோ தாய்மார்களையும் குழந்தைகளையும் இவர்கள் காப்பாற்றினார்கள்.

மதுரைக்கு அருகிலுள்ள டி.சுப்பலாபுரம் என்னும் கிராமத்தில் சாதிக்கொடுமை கடுமையாக இருந்தது. விவசாயமே முக்கியத் தொழிலாக இருந்த அந்தக் கிராமத்தில் மேல்சாதிக்காரர்களின் நிலங்களில் தாழ்த்தப்பட்டவர்கள் அனைவரும் கூலிபெற்று வேலை செய்துவந்தனர். கூலிக்கு வேலை செய்கிறவர்கள் என்பதாலேயே அவர்களை அடிமைகளாக நடத்தினர் மேல்சாதிக்காரர்கள். அத்தளையிலிருந்து விடுபட, விவசாயத் தொழிலையே கைவிட்டு வேறு தொழிலில் ஈடுபட முடிவெடுத்து, வேலைக்குச் செல்ல மறுத்தனர். இதனால் வெகுண்டெழுந்த மேல்சாதிக்காரர்க்ள், தாழ்த்தப்பட்டவர்களுக்குச் சொந்தமான எட்டு வீடுகளைத் தீக்கிரையாக்கினார்கள். ஏராளமான கால்நடைகள் மாண்டன.

அக்குடும்பத்தினர் அனைவரும் சௌந்திரத்தைச் சந்தித்து உதவி கோரினர். தமக்கு ஏதேனும் தொழில் கற்றுக்கொடுத்தால், அதன் மூலம் தம் வாழ்க்கையைச் செம்மையாகவும் சுதந்திரமாகவும் நடத்தமுடியுமெனத்

தெரியப்படுத்தினர். உடனே அவர்கள் அனைவருக்கும் நேபாளத்தறியில் பயிற்சியளிக்க செளந்திரம் ஏற்பாடு செய்தார். நன்கு பயிற்சி பெற்றபின்னர், அவர்களாகவே தொழிலில் ஈடுபட்டு தம் வருமானத்துக்கான வழியைத் தேடிக்கொண்டனர். அங்கு பயிற்சி பெற்ற முப்பது குடும்பங்களுக்கும் செளந்திரம் வீடுகளைக் கட்டிக்கொடுத்தார். இக்குடியிருப்புகள் இன்றும் செளந்திரம் காலனி என்றே அழைக்கப்பட்டு வருகிறது.


வீதி வீதியாக சென்று கதராடை விற்பனை செய்தபோது

சேவை மையங்களின் எல்லையை அடுத்தடுத்து விரிவுபடுத்திக்கொண்டே இருந்தார் செளந்திரம். மதுராந்தகத்துக்கு அருகில் உள்ள செய்யூரில் தொழுநோய் மருத்துவமனை தொடங்கப்பட்டது. அடுத்து லகுமையா என்பவரின் உதவியுடன் சின்னாளப்பட்டியில் காந்திகிராமம் அமைக்கப்பட்டது. முதலில் சிறிய அளவில் அங்கு வார்தா கல்வித்திட்டத்தின் அடிப்படையில் குழந்தைகளுக்கான ஆதாரப்பள்ளி தொடங்கப்பட்டது. மாணவர்கள் சேர்க்கை சிறுகச் சிறுகப் பெருகியது. ஐந்தாண்டுகளுக்குப் பிறகு உயர் ஆதாரப்பள்ளி நிறுவப்பட்டது. இதைக் கட்டுவதற்காக, செளந்திரத்தின் தந்தையார் சுந்தரம் ஐயங்கார் தன் பேரன் தம்பி என்பவரின் நினைவாக பதினேழு ஏக்கர் பரப்பளவுள்ள தோட்டமொன்றை வாங்கி அன்பளிப்பாக அளித்தார். பிற்காலத்தில் இத்தோட்டம் தம்பித் தோட்டம் என்றே அழைக்கப்பட்டது. இப்பள்ளியில் எட்டாம் வகுப்பைப் படித்து முடித்தவர்கள் உயர்கல்வியைப் படிக்கும் வகையில் 1954ஆம் ஆண்டில் உயர்தர ஆதாரப்பள்ளி இதே இடத்தில் நிறுவப்பட்டது. அதிலும் விவசாயமும் துணி உற்பத்தியும் முக்கியப்பாடமாக இருந்தது. பிறகு 1956இல் அரசு அனுமதியோடு கிராமியக் கல்லூரியும் இங்கு தொடங்கப்பட்டது. காந்தி கிராமக் கிராமியக் கல்லூரியில் வழங்கப்படும் பட்டங்களும் பட்டயங்களும் இந்தியாவில் உள்ள அனைத்துப் பல்கலைக்கழகங்களிலும் அங்கீகரிக்கப்பட்டன. இந்தியாவில் உள்ள பதினான்கு கிராமியக் கல்லூரிகளில் காந்தி கிராமக் கல்லூரியே முதல்நிலை வகிக்கிறது. படிப்படியாக இது பல்கலைக்கழகமாகவும் உயர்ந்தது.

காந்திகிராமத்தில் செளந்திரம் கைத்தொழில் கூடமொன்றையும் தொடங்கினார். அங்கு பொம்மை செய்தல், மண்பாண்டங்கள் செய்தல், தச்சுவேலை செய்தல், சலவை சோப், குளியல் சோப் உற்பத்தி செய்தல் என பலவிதமான வேலைகள் கற்றுத் தரப்பட்டன. கதர் தறிகள், அச்சகம், தச்சுப்பட்டறை, எண்ணெய் ஆட்டுதல், இரும்புப்பட்டறை என அனைத்துமே அத்தொழிற்கூடத்தில் அமைந்திருந்தன.

செளந்திரத்தின் முயற்சியால் உருவான மற்றொரு கல்விக்கூடம் சிவசைலத்தின் ஔவை ஆசிரமம். இது பெண்களுக்கான ஆசிரியைப் பயிற்சியை வழங்கும் நிலையமாகும். அதைத் தொடர்ந்து வாய்பேச முடியாத, காதுகேளாத பிள்ளைகள் படிப்பதற்கான ஒரு பள்ளியையும் தொடங்கினார்.

காந்தியடிகளின் நிர்மாணத் திட்டத்தில் செயல்படுகிறவர்கள் பொதுவாக அரசியல் களத்தில் இறங்குவதில்லை. செளந்திரம் அம்மையாரும் கிராம முன்னேற்றம், பெண்கள் முன்னேற்றம், கல்வி, தாழ்த்தப்பட்டோர் சேவை, குழந்தைகள் நலம் போன்றவற்றிலேயே மூழ்கியிருந்தார். ஆனால், இவருடைய சேவைகளினால் நேரிடையாகப் பலன்பெற்ற கிராம மக்கள் ஒன்றிணைந்து அவரைச் சந்தித்து வலியுறுத்தியன் விளைவாக, 1952ஆம் ஆண்டில் ஆத்தூர் தொகுதியிலும் 1957ஆம் ஆண்டில் வேடசந்தூர் தொகுதியிலும் போட்டியிட்டு வெற்றிபெற்று சட்டமன்றத்தில் அடியெடுத்து வைத்தார். தொடர்ந்து 1962ஆம் ஆண்டில் மதுரை தொகுதியின் சார்பாக பாராளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டு வென்று நேருவின் ஆட்சியில் துணை கல்வியமைச்சராகப் பணிபுரிந்தார்.

“எங்கு சத்தியத்தின் ஆட்சி நிலவுகிறதோ, அங்கே வெற்றி இருக்கும்” என்பது காந்தியடிகளின் சொல். செளந்திரம் போன்ற காந்தியர்கள் தம் ஆழ்மனத்தில் சத்தியம் மீது கொண்டிருந்த பற்று கடலைவிட ஆழமானது. மானுட சேவையைத் தவிர வேறெந்த எண்ணமும் அத்தகையோருக்கு இருந்ததில்லை. சேவை என்னும் எண்ணமே அவர்களைச் செயல்படத் தூண்டும் அடிப்படை விசை. சாதி, மொழி, இனம் ஆகிய வேறுபாடுகளைக் கடந்து அனைவரையும் நேசித்து அரவணைத்துக்கொள்ளும் அன்பும் பண்பும் அவர்களுடைய நெஞ்சில்



**நடேசன், வண்ணநிலவன் தொடர்கள் அடுத்த இதழில் இடம்பெறும்.**

நிரம்பியிருக்கின்றன. அவர்களுடைய செயல்பாட்டில் இருக்கும் உண்மைத்தன்மையே எதிர்வரும் எல்லாத் தடைகளையும் உடைத்து அப்புறப்படுத்திவிடுகின்றன. ஒருவர் தம் வாழ்நாளில் அறுபதுமையங்களை உருவாக்கி செயல்படவைப்பது என்பது எளிய செயலல்ல. அவற்றைச் செய்துமுடித்த சாதனையாளராக நம் முன் விளங்குகிறார் சௌந்திரம்.

ஒரு விழாவின்போது ஒரு பெரியவர் மேடைக்கு வந்து சௌந்திரம் அம்மையாரின் பணிகளைப் பாராட்டிவிட்டு, அவருக்கு ஒரு சிலை நிறுவ அனுமதி வேண்டுமென்று ஒரு கோரிக்கையை வைத்தார். அதைக் கேட்டு மேடையிலேயே வெகுண்டெழுந்த அம்மையார், அப்படி யாரேனும் சிலை வைத்தால் அந்தச்சிலையின் முன்னால் உண்ணாவிரதமிருந்து உயிர் நீத்துவிடுவேன் என்று ஆவேசத்துடன் முழங்கினார். எந்த இடத்திலும் தன்னை முன்னிறுத்திக்கொள்ளாமல் தான் ஆற்றவிருக்கும் சேவையை முன்னிலைப்படுத்தித் தொண்டாற்றிய பெருமை சௌந்திரம் அம்மையாருக்கு உண்டு. அதனாலேயே பொதுமக்களால் அவர் அன்புடன் அம்மா என அழைக்கப்பட்டார். ‘என் வாழ்க்கையே என் செய்தி’ என்னும் காந்தியின் வழியில் தன் வாழ்க்கையையே தன் செய்தியாக எஞ்சும்படி இந்த உலகைவிட்டு மறைந்துபோனார் அவர். அவர் மறைவுக்குப் பிறகே அவரைப் பற்றிய தகவல்களெல்லாம் திரட்டப்பட்டன. ‘அறம் வளர்த்த அம்மா’ என்னும் தலைப்பில் அவர் வாழ்க்கை வரலாற்றை நூலாக எழுதியவர் இராஜபாளையம் இராஜுக்கள் கல்லூரியில் ஆசிரியராகப் பணியாற்றிய பி.எஸ். சந்திரப்பிரபு. ●

பாவண்ணன் <paavannan@hotmail.com>

## எர்னெஸ்ட் ஹெமிங்வே

# பேராற்றலின் உன்னதம்

ட்டி.ஆர். நடராஜன்

**பேட்டி காண்பவர்:** எவ்வளவு முறை திரும்பத் திரும்ப நீங்கள் எழுதுகிறீர்கள்?

**ஹெமிங்வே:** அது அந்த எழுத்தைப் பொறுத்தது. 'ஃபேர்வெல் டு ஆர்ம்ஸ்' நாவலின் கடைசிப் பக்கத்தை நான் 39 தடவை திருத்தி எழுதினேன். அது எனக்குத் திருப்தி தரும் வரை.

**பே:** ஏன், ஏதாவது டெக்னிகல் பிரச்சினையா?

**ஹெமி:** சரியான வார்த்தைகளுக்காகக் காத்திருக்க வேண்டியதாயிற்று.

*-(1958 பாரிஸ் ரிவியூவுக்குக் கொடுத்த பேட்டியில்)*

இலக்கியத்துக்கான நோபல் பரிசு வாங்கி ஏழு வருஷங்கள் கழித்து ஒரு கோடை இரவில் தன் வீட்டை அடைந்ததும், இரட்டைக் குழல் துப்பாக்கியை எடுத்துத் தலையில் சுட்டுத் தற்கொலை செய்துகொண்ட போது, எர்னஸ்ட் ஹெமிங்வேயின் வயது அறுபத்தி இரண்டு. மன அழுத்தத்தால் சில காலமாகவே பீடிக்கப்பட்டிருந்த அவர், 'இனி சொல்வதற்குத் தன்னிடம் ஒன்றும் இல்லை; எல்லாம் முடிந்துவிட்டது' என்று தன்னை மாய்த்துக்கொண்டார்.

ஹெமிங்வேயின் எழுத்தில் பரவிக்கிடந்த கவர்ச்சி அசாதாரணமானது, தனித்துவம் மிக்கது. அவரது படைப்பு என்பது அமானுஷ்யத்தின் உச்ச சக்தியில் எழுந்த உருவாக்கம். அது எல்லோருக்கும் கிட்டிவிடுவதில்லை. அத்தகைய படைப்புத் திறனை மற்றொரு எழுத்தாளனால் தேடி அடைவதோ, வலிந்து பெறுவதோ ஆகக் கூடிய காரியமில்லை. கட்டுக்கோப்பும் பொருட்செறிவும் நிறைந்த கருப்பொருள், வீணடிக்கப்படாத வார்த்தைகள், இசையின் லாகவத்தை உள்ளடக்கிய - பலமுறை திரும்பத் திரும்ப வரும் - சொல் அல்லது பெயர் ஆகிய அனைத்தையும் கொண்ட அவரது நடை பல்லாயிரக்கணக்கான வாசகர்களைக் கட்டிப் போட்டிருந்தது.

அவரது வாழ்நாளில் ஹெமிங்வே ஏழு நாவல்கள், ஆறு சிறுகதைத் தொகுதிகள், இரண்டு அபுனைவு நூல்கள் ஆகியவற்றைப் படைத்திருந்தார். அவர் ஆறு மாதமே ரிப்போர்ட்டராக வேலை பார்த்த கான்சாஸ் சிட்டி ஸ்டார் பத்திரிகை நிர்ணயித்த, "சின்னஞ்சிறு வாக்கியங்களாக எழுது; முதல் பாரா எப்போதும் சுருக்கமாக இருக்க வேண்டும்; ஆங்கில மொழியின் கூர்மையை எப்போதும் தீட்டிப் பார்த்துக்கொண்டே எழுது; உன்னை எதிர்கொள்ளும் விஷயங்களை நேர்மறையாகப் பார்; எதிர்மறை எண்ணங்களுக்கு இடம் கொடாதே !" என்ற கோட்பாடுகளைத் தனது எழுத்தின் அஸ்திவாரமாக ஆக்கிக்கொண்டார்.

ஹெமிங்வேயின் ஆரம்ப கால எழுத்துக்கள் வெற்றியின் நிழலில் இளைப்பாறவில்லை. அவர் சிறுபத்திரிகைகளில் எழுதிய சிறுகதைகளைத் தொகுத்து வெளிவந்த, 'மூன்று கதைகளும் பத்து கவிதைகளும்' என்ற புத்தகம் முன்னூறு பிரதிகளே அச்சடிக்கப்பட்டன. 'நம் காலத்தில்...' என்ற அவரது இரண்டாவது புத்தகம் 170 பிரதிகள்தான் விற்பனைக்கு வந்தன. "நான் ஒருநாவலை எழுதியே ஆக வேண்டும்" என்று ஹெமிங்வே எண்ணினார்.

அதற்கேற்றாற் போல், அச்சமயம் ஹெமிங்வேயின் நெருங்கிய நண்பரான ஸ்காட் ஃபிட்ஸ்ஜெரால்ட், அவரது முதல் நாவலான 'சுவர்க்கத்தின் இந்தப் பக்கம்' என்னும் நாவலை எழுதும் வரை, தோல்வி அவரைத் தழுவிக்கொண்டு உட்கார்ந்திருந்தது. அதற்குப் பின் அவரே ஹெமிங்வேயிடம் சொன்னதுபோல, "பத்திரிகை ஆசிரியர்களும் அதிபர்களும் என்னிடம் இப்போது ஓடி வருகிறார்கள். நாடக அரங்கினர் நாடகம் கொடு என்று பிய்த்தெடுக்கிறார்கள். திரையுலகினர் கதை தா என்று விரட்டுகிறார்கள்" என்ற நிலைமைக்கு வந்துவிட்டார்.

இத்தகைய வெற்றியைக் குறி வைத்துத்தான் தானும் ஒரு சிறந்த நாவலை எழுத வேண்டும் என்று ஹெமிங்வே தீர்மானித்தார்.

எழுத்தாளராக அவர் புடம் போடப்பட்ட இடம் பாரீஸ்தான். உலகப் புகழ்பெற்ற கலைஞர்களான ஜெர்ட்ரூட் ஸ்டெய்ன், ஜேம்ஸ் ஜாய்ஸ், எஸ்ரா பவுண்ட் ஆகியோரின் நட்பு அவருக்கு கிட்டியது. ஜெர்ட்ரூட் ஸ்டெய்ன் முதல் சந்திப்பிலேயே ஹெமிங்வேயிடம், "எழுத்தாளனோ, ஓவியனோ, இசைக்கலைஞனோ நடன வியக்தியோ, யாராக இருந்தாலும் அவர்களின் செயல்பாடு என்பது எப்படி இருக்க வேண்டும்? "திரும்ப, திரும்பத் திரும்பச் செய்வதில் இருக்கிறது" என்றார். ஸ்டெய்னின் இந்த வாக்கை நினைவில் நிறுத்திக்கொண்ட ஹெமிங்வே செசானே, மோனே, பிக்காஸோ ஆகியோரின் ஓவியங்கள் நிகழ்த்திக்காட்டிய சாதனையைத், தான் தனது எழுத்துக்களின் மூலமாக சாதித்துக்காட்ட வேண்டும்; அவ்வோவியங்களில் காணப்பட்ட துல்லியத்தையும் செழுமையையும் தொலைநோக்கையும், படைப்புத் தரிசனத்தையும் தன்னுடைய எழுத்துக்கள் நிகழ்த்திக் காட்ட வேண்டும் என்று விரும்பினார்.

ஜெர்ட்ரூட் ஸ்டெய்னின் பாதிப்பு ஹெமிங்வேயின்



ஆரம்ப கால எழுத்துக்களில் இருந்தது. சாதாரணர்களின் பேச்சு வழக்கை உபயோகப்படுத்திய அதே சமயம் அவர் வருணனைகளைத் தவிர்த்தார். இதன்மூலம் வாசகர்களின் கவனம் சிதறப்படாது தன் படைப்பின் நோக்கத்தை அவர்கள் உள்வாங்கிக் கொள்வார்கள் என்று அவர் நம்பினார். ஓர் உணர்ச்சியின் தீவிரத்தை, அந்த உணர்ச்சியை நிலைநாட்டுவதைத்தவிர்ப்பதன்மூலம்,வாசகரிடத்தில் கொண்டுபோக முடியும் என்பது ஹெமிங்வேயின் நம்பிக்கையாக இருந்தது. அவரிடம் தென்பட்ட இப்போக்குகள் ஸ்டெய்னின்,ஷெர்வுட் ஆண்டர்சனின் நட்பினால் விளைந்தவை என்று விமரிசகர்கள் கருதுகிறார்கள்.

ஒருமுறை ஹெமிங்வேயும் அவரது முதல் மனைவி ஹேட்லியும் வெளியூர் சென்ற போது ஹெமிங்வே எழுதி வைத்திருந்த ஒரு நாவலின் ஆரம்பப் பக்கங்களை வழியில் ஹேட்லி தொலைத்துவிட்டார். 'இளைஞனுடன்..' என்று அவர் எழுத ஆரம்பித்த மற்றொரு நாவல் இருபத்தியேழு பக்கங்களுக்கு மேல் தாண்டவில்லை. ஆகவே, 'எழுதித் தீர வேண்டும்' என்னும் அரிப்பும் வெறியும் வரும் வரை அவர் காத்திருக்கத் தீர்மானித்தார். "நான் எழுத வேண்டும் என்னும் தருணம் வரும்போது அது ஒன்றுதான் என் சிந்தனையில் தங்கியிருக்க வேண்டும், முழு மூச்சாக அதைத் தவிர நான் வேறு எதையும் குறுக்கிட அனுமதிக்கக் கூடாது" என்று கூறினார்.

'சூரியனும் உதிக்கின்றது' என்னும் நாவல் அத்தகைய மகத்தான நிகழ்வைக் கொண்டு வந்தது. அது வெளியானவுடன் இலக்கிய வானில் புதிய தாரகை என்று ஹெமிங்வேயை நோக்கிப் பாராட்டுக்கள் குவிய ஆரம்பித்தன. தன்னுடைய 26ஆவது பிறந்த நாளன்று *(21-07-1925)* அவர் எழுத ஆரம்பித்த, 'சூரியனும் உதிக்கின்றது' என்னும் முதல் நாவலை இரண்டு மாதத்துக்குள் எழுதிவிட்டார். பிறகு அதை சில காலம் மூலையில் தூக்கிப் போட்டுவிட்டு 1926ஆம் ஆண்டு மறுபடியும் எடுத்து பல மாறுதல்களைச் செய்து வெளியிட்டார். அவர் ஸ்பெயினுக்குச் சென்ற பின் மீளாக் காதல் கொண்டுவிட்ட எருதுச் சண்டைப் போட்டியையும் பாரிஸ் வாழ்க்கையில் தினமும் எதிர்கொண்ட பிரச்சினைகளையும் இந்நாவலின் கதாநாயகர்களாகச் சுழலவிட்டார். இந்த நாவலில் உண்மையில் நடந்த சம்பவங்களும் அசல் நபர்களும் இடம் பெற்றிருந்தனர். 'இழந்த தலைமுறை' என்று அழைக்கப்பட்ட முந்திய தலைமுறையைச் சார்ந்தவர்கள் தரங்கெட்டவர்களென்றும், ஒழுக்கக்கேட்டை ஓம்பியவர்களென்றும், திரும்பப் புனருத்தாரணம் செய்ய முடியாத அளவுக்குச் சீரழிந்தவர்கள் என்றும் பரவியிருந்த அபிப்பிராயங்களை எதிர்த்து ஹெமிங்வே இந்த நாவலை எழுதினர். அந்தத் தலைமுறையினர் எதையும் தாங்கும் திறம் கொண்டவர்களென்றும், கட்டுப்பாட்டுடன் இயங்கிவர்களென்றும், பலசாலிகளென்றும் சுட்டிக் காட்டி எழுதினார். வாழ்வைச் சூழ்ந்திருக்கும் காதலையும் சாவையும், அவற்றிலிருந்து மீண்டு உயிர்த்தெழும் இயற்கையையும், மனிதரின் ஆண்மையையும் அவர் பதிவு செய்தார்.

நியூயார்க் டைம்ஸ் விமர்சகர் அக்டோபர் 1926இல், 'சூரியனும் உதிக்கின்றது' நாவலைப் பற்றி இவ்வாறு எழுதினார்:

*எவ்வளவு ஆராய்ச்சி விமரிசனக் கட்டுரைகள்*

எழுதப்பட்டாலும் 'சூரியனும் உதிக்கின்றது' நாவலின் உயர்ந்த தரத்தை விளக்க வாய்ப்பில்லை. அது வாசகனைத் தனது இறுக்கமான பிடியில் வைத்துக்கொள்ளும் சக்தி வாய்ந்ததாய் இருக்கிறது. உயரமும் முகப் பொலிவும் இறுகக் கட்டின உடம்புமாய்க் குதிக்கும் ஒரு விளையாட்டு வீரனைப் போல் எகிறும் அவரது நடை ஆங்கில மொழியையே வெட்கமுறச் செய்கிறது. ஹெமிங்வேக்கு வார்த்தைகளை எப்படிக் குறி பார்த்து உபயோகிக்க வேண்டும் என்றும், அவரது வாக்கியங்கள் வெளிப்படுத்தும் அர்த்தத்தை விட வெளிப்படுத்தாத அர்த்தங்கள் வாசகர்களை சென்றடைந்து அவர்களைத் திக்பிரமையில் ஆழ்த்த வேண்டும் என்றும் தெரிந்திருக்கிறது. இது ஓர் தலைசிறந்த எழுத்து. இதிலிருந்து வெளிப்படும் பாத்திரங்களின் உயிர், படைப்பின் உச்சத்தை நிலைநாட்டுகின்றது.



ஏர்னெஸ்ட் ஹெமிங்வே மற்றும் அவரது மனைவி மேரி வேல்ஸ்

ஜான் ஓஹாரா மற்றொரு சந்தர்ப்பத்தில் நியூயார்க் டைம்ஸில், "1616ஆம் ஆண்டுக்குப் பின் தோன்றி எழுதி மறைந்த லட்சக்கணக்கான எழுத்தாளர்களைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னால் வந்து நிற்கும் சாதனைக் கலைஞன் ஹெமிங்வே" என்று எழுதினார். 1616ஆம் ஆண்டு என்பது ஷேக்ஸ்பியர் மறைந்த வருடம்!

வில்லியம் ஃபாக்னரும் ஹெமிங்வேயும் சமகாலத்தவர். இருவரும் நண்பர்களாயிருந்தாலும் எழுத்து என்று வரும் போது ஒருவரை ஒருவர் சீண்டிக் கொண்டேயிருந்தார்கள். ஒரு முறை ஹெமிங்வேயைப் பற்றிக் குறிப்பிடுகையில் ஃபாக்னர், "ஹெமிங்வேயின் வாசகன் அர்த்தத்தைத் தேடி அகராதியை நாட வேண்டிய சொல் என்று ஒன்றைக்கூட அவரது எழுத்தில் உபயோகித்ததில்லை" என்றார். இது ஹெமிங்வேயைப் பற்றித் தாழ்வாகச் சொல்லப்படவில்லை என்றாலும் ஹெமிங்வே கோபமடைந்து, "பாவம் ஃபாக்னர்! பெரும் உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதற்குப் பெரும் வார்த்தைகளை நம்பியிருக்கும் கஷ்டத்தில் இருக்கிறார்!" என்றார்.

இருவரும் நேரடியாகச் சந்தித்துக்கொள்ளா விட்டாலும் கடிதத் தொடர்பில் இருந்தார்கள். ஹெமிங்வேயின் புறத் தோற்றத்துக்கு மாறாக அவரிடம் தனது எழுத்து பற்றிய அச்சம் உள்ளூர இருந்தது. "ஃபாக்னர் நம்மிடையே உள்ள மிகச்சிறந்த படைப்பாளி" என்று அவர் கூறினாலும், ஃபாக்னரை அவ்வப்போது தாக்குவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். நியூயார்க் டைம்ஸ் விமரிசகர் ஹார்வி ப்ரெய்டுக்கு எழுதிய கடிதமொன்றில், "உலகிலேயே நீளமான வாக்கியத்தைக் கொண்ட புத்தகத்தை நீங்கள் பாராட்ட வேண்டும் என்று ஆசைப்பட்டால் ஃபாக்னருடன் சில சிறுவர்களையும் சேர்த்துக்கொண்டு ஒரு புத்தகம் எழுதலாம்!" என்றார் ஹெமிங்வே.

ஹெமிங்வேயின் 'கிழவனும் கடலும்' நாவலுக்கு ஃபாக்னரை முன்னுரை எழுதித் தருமாறு கேட்டபோது அவர் மறுத்துவிட்டார். ஆனால், அவரே பின்னாளில் இந்த நாவல் பற்றி இவ்வாறு எழுதினார்:

> *ஹெமிங்வேயின் தலைசிறந்த நாவல் இது. நம்மில் இதுவரை - எனது மற்றும் ஹெமிங்வேயின் தலைமுறையில் - எழுதப்பட்டவற்றுக்குள் மிகச் சிறந்த தனித்துவமான படைப்பு. இம்முறை அவர் கடவுள் என்ற படைப்பின் கர்த்தாவைக் கண்டுபிடித்து விட்டார். இதுவரை அவரது ஆண்களும் பெண்களும் தம்மைப் பற்றியும் தம்மிடமுள்ள களிமண்ணிலிருந்து*



*செய்யும் ஆக்கத்தைப் பற்றியும் நினைத்து அல்லாடியவர்கள். அவர்களுடைய வெற்றிகளும் தோல்விகளும் அவர்களின் கைகளில் இருந்தன. தாம் எவ்வளவு கடினமான பிரகிருதிகள் என்று அவர்கள் தமக்கும் வெளியுலகிற்கும் காட்டப் பிரயத்தனம் செய்தவர்கள். ஆனால் இம்முறை அவர் இரக்கத்தை, பரிவைப் பற்றி எழுதியிருக்கிறார். மீனைப் பிடித்த பின் அதை இழந்துவிடும் கிழவன், பிடிக்கப்பட்ட பிறகு இழக்கப்படும் மீன், கிழவனிடம் மீனைப் பறித்துக்கொள்ளும் சுறாக்கள் - இவர்களை இவைகளைப் படைத்து அன்பின் பிரவாகத்தையும் கருணையின் மேன்மையையும் காட்டியிருக்கிறார்.*

ஹெமிங்வேயின் புற வாழ்வில் அவரது தோற்றம் பெண்களை மிகவும் கவர்ந்திருந்தது. அவர் தனது தாயைத் தோற்றத்திலும் குணங்களிலும் கொண்டிருந்தார். அவரது தாய் கிரேஸ் ராயல்டி வாங்கும் சிறந்த பாடகியாக விளங்கினாள். குரல் மங்க ஆரம்பித்த போது, ஓவியக் கலையில் ஈடுபட்டு மாணவர்களுக்குப் பயிற்சி தந்தாள். தன்னுடைய ஓவியங்களைக் கண்காட்சிகளில் விற்பனை செய்தாள். நவீன மர வேலைப்பாடுகளில் ஈடுபட்டாள். பொக்காஸியோ, டான்டே போன்ற கவிஞர்களைப் பற்றி உரைகள் நிகழ்த்தினாள். அவளே கவிதாயினியாகவும் விளங்கினாள்.

தாயின் இந்த உயிர்த்துடிப்பான நடமாட்டத்தை ஹெமிங்வேயின் வாழ்க்கையிலும் பார்க்கலாம். காடுகளில் வேட்டையாடுவது, ஆழ்கடலில் மீன் பிடிப்பது, மலையேறுவது, ஸ்பெய்ன் வீதிகளில் எருதுச் சண்டைக்குத் தயாராயிருக்கும் எருதுகளை விரட்டிச் செல்வது, போர்முனையில் ஆம்புலன்ஸ் டிரைவராக வேலை பார்த்தது என்று அந்தந்த அனுபவங்களை அவர் விரும்பிச் செய்தார். இதன் பின்புலத்தில் அத்தகைய அனுபவங்களைத் தன் எழுத்தில் ஏற்றிப் பார்த்துவிட வேண்டும் என்கிற உத்வேகம்தான் காரணம் என்று தோன்றுகிறது.

அவரது கட்டுமஸ்தான உருவம் பற்றி, அவரது சரிதையை எழுதிய ஜேம்ஸ் மெல்லோ குறிப்பிடும்போது, "ஹெமிங்வே பெரும்பாலான எழுத்தாளர்களுடன் போய் சண்டை போடுவதை ஒரு தொழிலாக வைத்திருந்தார்" என்று நகைச்சுவையாகக் குறிப்பிடுகிறார். இந்த சண்டை பட்டியலில் டி.எஸ். எலியட், வாலஸ் ஸ்டீவன்ஸ், ஸ்காட் ஃபிட்ஸ்ஜெரால்ட், மாக்ஸ் ஈஸ்ட்மன் போன்ற பெருந்தலைகள் அடக்கம்.

ஜேம்ஸ் ஜாய்ஸும் ஹெமிங்வேயும் நெருக்கமான நண்பர்கள். இருவரும் சேர்ந்து குடித்துவிட்டு

வரும்போது பல சமயங்களில் நிதானமிழந்து ஜாய்ஸ் மற்றவர்களை சண்டைக்கு இழுத்து, அவர்கள் திரும்பத் தாக்க வரும்போது ஹெமிங்வேயின் பின்னால் ஒளிந்துகொண்டு, "அவனை ஒழித்துக் கட்டு, ஹெமிங்வே, ஒழித்துக்கட்டு" என்று கூச்சலிடுவாராம். ஹெமிங்வேயும் சிரித்துக்கொண்டே நண்பருக்கு உதவுவார் என்று சுயசரிதையாளர் குறிப்பிட்டிருக்கிறார்.



புகழ்பெற்ற கவிஞர் ஆர்ச்சிபால்ட் மெக்லே ஒருமுறை ஹெமிங்வேயைப் பற்றி பேசுகையில், "ஜனாதிபதி ரூஸ்வெல்ட் தவிர அறைக்குள் நுழைந்ததும் அனைவரின் கவனத்தையும் ஈர்க்கும் வல்லமை ஹெமிங்வேயிடம்தான் இருந்தது!" என்றார்.

"உங்கள் கலையின் உயிர்நாடி என்பது என்ன?" என்று ஹெமிங்வேயிடம் கேட்கப்பட்ட போது, "நிகழ்ந்தவற்றிலிருந்தும், நிகழ்ந்தவை அப்படியே இருந்து விடுகிற போதும், உங்களுக்கு எல்லாம் தெரிந்தும் அல்லது தெரியாமலிருந்தும், உங்களின் கண்டுபிடிப்பால் நீங்கள் நிகழ்த்தும் நிகழ்வு - அது உங்களை முழுமையாக வெளிப்படுத்தாவிடினும், உண்மையைக் காட்டிலும் உண்மையாக அது உருவாகி, அதற்கு நீங்கள் உயிர்கொடுத்தவராயிருந்தால், அதையும் சிறப்பாகச் செய்தால், அதற்கு நிரந்தரத்தன்மை அல்லது சாகாவரம் கொடுத்தவராவீர்கள்" என்றார்.

ஹெமிங்வேக்கு நோபல் பரிசு கிடைத்த போது அவருக்கு உடல் நிலை சரியாக இல்லாததால் பரிசை நேரே சென்று வாங்க முடியாமல் போய்விட்டது. அச்சமயத்தில் அவர் எழுதி, வாசிக்கப்பட்ட சில பகுதிகள் கீழே. இதில் ஹெமிங்வேயின் எழுத்தாளுமையையும் சிந்தனை வீச்சையும் பிரதிபலிக்கக் காணலாம்:

> *தனக்கு முன்னோடிகளான மிகச் சிறந்த எழுத்தாளர்களுக்குக் கிடைக்காமல் போய்விட்ட நிலையில் இந்தப் பரிசைப் பெறும் எழுத்தாளன் மிகுந்த பணிவுடன்தான் ஒப்புக்கொள்ள முடியும். அம்முன்னோடிகளைப் பற்றிய பட்டியல் எதுவும்இங்குஇட வேண்டியதில்லை. அவரவர் விருப்பப்படி, தரப்படி, மனசாட்சிப்படி இந்தப் பட்டியல் வேறுபடும்.*
>
> *என் மனதில் உள்ள அத்தனை விஷயங்களையும் ஒரு குறிப்பில் தெரிவித்து விடுவது என்பது இயலாத காரியம். ஒருவன் எழுதுவதை உடனடியாக நுணுகிக் காண்பது என்பதும் இயலாத காரியமே - சில சமயம் அவன் அதிர்ஷ்டசாலியாக இருந்தால் ஒழிய.*
>
> *எழுதுவது என்பது தனியாக வாழும் சாபக்கேடு. நிறுவனங்கள் எழுத்தாளனின் தனிமையைப் போக்க முயலலாம். ஆனால், அது பெரும்பாலும் அவனது எழுத்தைச் சீர்குலைத்துவிடுகிறது. அவன் தனதுசெயலைத் தனியொருவனாகப் புரிய வேண்டியிருக்கிறது. அதில் அவன் நித்தியத்துவத்தை அடைகிறான் அல்லது அடையவில்லை, அவ்வளவுதான்!*
>
> *ஒவ்வொரு புத்தக உருவாக்கமும் ஒரு புதிய வாசலைத் திறக்கிறது. ஏற்கனவே செம்மைப்படுத்தப்பட்ட சாலையில் அவனுக்கு வேலையில்லை. அதை அவன் தாண்டிச் சென்றாக வேண்டும். அதுதான் சாதனையின் உச்சத்தைத் தழுவ முயலும். மிகச் சிறந்த எழுத்தாளர்கள் நமக்கு முன்பு தலைசிறந்தவற்றைப் படைத்துவிட்டுப் போய்விட்ட பின், நாம் அவற்றைக் கடந்து செல்வதைத் தவிர வேறு வழியில்லை. யாரும் கண்டிராத இடத்தை அடைய வேண்டுமென்றால்!*
>
> *நான் அதிகம் பேசிவிட்டேன். ஓர் எழுத்தாளன் என்ன பேச வேண்டுமோ அதை அவன் எழுத வேண்டும். அதைப் பற்றி பேசுவதை அல்ல.* ●

**ட்டி.ஆர். நடராஜன் <natarajan.blore@gmail.com>**

# குளந்தை

ஸிந்துஜா ஓவியம்: மீரா



சின்னு, அண்ணார் வீட்டை அடைந்த போது வாசல் திண்ணையில் அண்ணார் உட்கார்ந்திருந்தார். அவனைப் பார்த்ததும் அவர் முகம் மலர்ந்தது. "வாடா சின்னு. எப்பவும் டயத்துக்கு வந்திருவானே, இன்னும் வரலையேன்னு ரோசிச்சிகிட்டு இருந்தேன்" என்றார்.

சின்னு கையிலிருந்த பையை அவர் பக்கத்தில் வைத்துவிட்டு, "கௌம்பும் போதே அரமண்ணேரம் லேட்டாக்கிட்டான். நீங்க சவுக்கியமா அண்ணே?" என்று கேட்டான்.

பேச்சு சத்தம் கேட்டு உள்ளேயிருந்து வந்த அண்ணி, "வாப்பா சின்னு. உன்னையேதான் நினைச்சுகிட்டு இருந்தோம். தோட்டத்துல போயி ஒரு பத்து பதினஞ்சு தேங்காய பறிச்சிகிட்டு வரணும், ஒருத்தனையும் காணோமேன்னு பதட்டமா இருந்துச்சு" என்றாள்.

"வந்தவுடனேயே வேல வச்சிருக்கா பாரு" என்றார் அண்ணார்.

அண்ணி எதுவும் மறுமொழி கொடுக்கும் முன்னேயே, "அதுக்கென்ன அண்ணி, ரெண்டு எட்டுலதான இருக்கு. போயி பறிச்சிட்டு வந்திர்றேன்" என்று எழுந்தான் சின்னு.

"இரு, இரு. காப்பி போட்டு தாரேன். ஒரு வாய் குடிச்சிட்டு போ" என்றாள் அண்ணி.

"கொண்டாங்க. அந்த அமிருதத்த குடிச்சிட்டு நிமிசத்தில போயிட்டு வந்திடறேன்" என்று சிரித்தான் சின்னு.

"டேய், டேய். ஏண்டா இப்படி அவளை ஏத்தி விட்டுட்டு போறீங்க? அப்புறமா அவ அந்த கழுநீரைக் கொணாந்து என்னயக் குடிக்க வச்சி, நான் ஏன் அதை பாராட்டலேன்னு சண்டைக்கு வருவாடே" என்றார் அண்ணார்.

"ஆமா. இவரு மூக்கணாங்கயிறு கட்டிக்கிட்டு உக்காந்திருந்தா நாங்க கழுனித் தண்ணியதான மொண்டு ஊத்துவோம்" என்று அண்ணி சிரித்தாள்.

"டேய் சின்னு, எனக்கு இதெல்லாம் வேணுமாடா?" என்று அண்ணார் கலங்கிய குரலில் தன் நாடகத்தை நடத்தினார்.

சின்னு அண்ணாரைப் பார்த்தான். உட்கார்ந்த வாக்கிலேயே அவரது ஓங்கிய உருவம் தெரிந்தது. பெரிய உருவம், பெரிய முகம், விம்மும் கட்டான நெஞ்சு, பெரிய கை , பெரிய கால். அவர் அவனுக்குப் பெரியம்மா

மகன். ஆனால், அன்பும் அரவணைப்பும் ஏதோ கூடப் பிறந்தவனுக்கும் கொடுப்பதற்கு மேல்தான். இன்று அண்ணாரின் அம்மாவுக்குத் திதி. அதற்குத்தான் அவன் கோலாரில் விடிகாலை நாலேமுக்கால் மணி டிரெயினைப் பிடித்து எட்டரை மணிக்கு வந்து சேர்ந்திருக்கிறான்.

ஐந்து நிமிஷத்தில் காப்பி வந்துவிட்டது. அண்ணி கோப்பையை சின்னுவிடம் கொடுத்து, "இந்தா காப்பி. இன்னிக்கி திதியில்லே, அதனால இவுருக்கு இன்னிக்கி கழுனி கிடையாது" என்றாள்.

காப்பியின் மணம் மூக்கைத் துளைத்தது.

சின்னு அவளிடம், "அண்ணி, ரெண்டு பெரிய சாக்குப் பை குடுத்திருங்க" என்றான். அவள் சாக்குப் பைகளையும் ஒரு பெரிய அரிவாளையும் கொண்டு வந்து அவனிடம் கொடுத்தாள். சின்னு கிளம்பும் சமயம் அண்ணார் அவனிடம், "எல்லாத்தையும் எப்பிடிடா நீயே ஒண்டியா செய்வே? சம்முவத்தைக் கூட்டிகிட்டு போவேன்" என்றார்.

சண்முகம் அண்ணாரின் ஒரே பையன். அவனும் இன்று திதி என்று வேலைக்கு லீவு போட்டுவிட்டு வீட்டில்தான் இருப்பான்.

"அட இது என்ன பெரிய வேலங்கிறேன்? சம்முவம் சின்னப்புள்ள. அதப் போயி தூக்கிட்டு வரச் சொல்றதாவது?" என்றான் சின்னு.

"அடேய், இன்னும் அவன் குளந்தையா உன் மடில உக்காந்திருக்கான்னு நினைச்சிட்டிருக்கியா? அவனும் கல்யாணம் கட்டி ரெண்டு வருசம் ஆகப் போகுதடா" என்றார் அண்ணார்.

அண்ணி கணவனிடம், "பூசாரி எத்தினி மணிக்கு வரேன்னாரு?" என்று கேட்டாள்.

"ஒம்பதரைக்கின்னு சொன்னாரு. அப்பிடில்லாம் சொன்ன நேரத்துக்கு வந்திருவாங்களா? எப்பிடியும் பத்து மணி ஆக்கிருவாரு. சரி, நா போயி தலை யில தண்ணி ஊத்திக்கிட்டு வரேன். சின்னு நீயும் வெரசா வாடா. வந்து குளிச்சிட்டு எல்லாரும் ரெடியாகணுமில்ல?" என்று எழுந்தார்.

சின்னு சண்முகத்தின் சைக்கிளை எடுத்துக்கொண்டு தோட்டத்துக்குப் போனான். அண்ணாரின் பாட்டன் வழிச் சொத்து. மா, வேம்பு, தென்னை, முருங்கை, நாகலிங்கம், கொய்யா, விசிறி வாழை மரங்களும், மல்லிப் பந்தல், ரோஜாப் பதியன், கனகாம்பரம், ஜவந்தி

செடிகளும் வளர்ந்து செழித்துக் கிடந்தன. எல்லாம் அண்ணாரின் உழைப்பையும் பிரியத்தையும் சம்பாதித்து வளர்ந்தவை போல நின்றன. சின்னு இரண்டு தென்னை மரங்களில் ஏறி காய்களை வெட்டி சாக்குப் பைகளுக்குள் போட்டான். காய்கள் ஆளை அடிக்கிற மாதிரி 'கிண்'ணென்று இருந்தன.

சாக்குப் பைகளை சைக்கிளில் வைத்துக் கட்டிவிட்டுக் கிளம்பும் போது சண்முகம் வந்தான்.

"வணக்கம் சித்தப்பா. நல்லா இருக்கீங்களா? நீங்க எதுக்கு இதையெல்லாம் செய்யணும்? நான் கொண்டு வந்திருப்பேன்ல" என்றான்.

"மவனே, உனக்கு மரம் ஏறத் தெரியுமாலே?" என்று சின்னு சிரித்தான். "ஆபிசர் கணக்கா சேர், டேபில் போட்டுக்கிட்டு கம்பூட்டர தட்டுற கைக்கு அருவா பிடிக்கத் தெரியுமா, சொல்லு!" என்றபடி சண்முகம் கூட வருவதற்கு ஏதுவாக சைக்கிளைத் தள்ளிக்கொண்டு கிளம்பினான். சண்முகம் விப்ரோவில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். வீட்டுக்குப் பக்கம்தான் அவனுக்கு ஆபிஸ்.

"அமுதா எப்பிடி இருக்கு?" என்று சண்முகத்தின் மனைவியைப் பற்றி சின்னு விசாரித்தான்.

"இன்னிக்கி அதுவும் லீவுதான். டெயிலி பஸ்ல இருபத்தி அஞ்சு கிலோமீட்டரு போயிட்டு வர்றது அதுக்கும் கஸ்டமாதான் இருக்கு" என்றான் சண்முகம். அமுதா விதான் சௌதாவில் வேலை பார்த்தாள். படித்திருக்கிறோம், வேலை பார்க்கிறோம் என்கிற கர்வம் எதுவுமில்லாமல் வளைய வரும் பெண்.

"சேரு மார்கெட்டு வெளையாட்டெல்லாம் எப்பிடி இருக்கு ராசா?" என்று சின்னு கேட்டான்.

"எங்கூர் புரோக்கர் பய புள்ள குமாரசாமி வெளுத்துக் கட்டுறேங்குறான். நம்ப முடியாத ராஸ்கோலு" என்று சிரித்தான்.

சண்முகமும் சேர்ந்து சிரித்தான். "உங்களுக்குதான் தெரியுமே சித்தப்பா, போன தடவ சரியான அடின்னு. இப்பதான் ரெண்டு வருசமா போட்ட முதல திரும்ப எடுத்துக்கிட்டு இருக்கேன். இந்த மார்க்கட்டுல நம்ப ஆளுங்க எங்க இருக்கானுங்க? வெளிநாட்டுக்காரன்ல ஏத்தறான் இறக்கறான் ராக்கட்டு கணக்கா?"

சண்முகம் மிகவும் வெளிப்படையானவன். பொய் புரட்டு இதெல்லாம் அவனை அண்டவில்லை. அவன் முகத்தைப் பார்த்தாலே அகத்தின் சுத்தம் தெரியுது என்று எப்பவும் சின்னு நினைப்பான். அண்ணாரும் அண்ணியும் அவனை வளர்த்த விதம் அப்படி என்று சின்னுவுக்கு நெஞ்சு விம்மிற்று.

அவர்கள் வீட்டை அடைந்த போது பூசாரி வந்திருக்கவில்லை. சின்னு உள்ளே சென்றான். அவனைக் கண்டதும் கூடத்தில் உட்கார்ந்திருந்த அமுதா புன்னகை செய்துவிட்டு சின்னுவை வணங்கினாள். சின்னுவும் சண்முகமும் குளிக்கக் கிணற்றுப் பக்கம் சென்றார்கள்.

அண்ணார் சொன்னபடி பூசாரி பத்து மணிக்கு புதிய ராயல் என்பீல்ட் பைக்கில் வந்தார். பளபளவென்று சூரிய ஒளி பட்டு நிகுநிகுத்தது. வண்டி ஓட்டி வந்த சத்தமே கேட்கவில்லை.

சின்னு அவரைப் பார்த்து, "ரொம்ப மாடர்ன் சாமி ஆயிட்டீங்க. சும்மா அலம்பலா இருக்கே வண்டி?" என்று சிரித்தான்.

"சும்மாவா? ஒன்றரை லச்சமில்லா!" என்றார் பூசாரி பெருமையாக.

"எப்ப வாங்கினீங்க?" என்று சின்னு கேட்டான்.

"அஞ்சாறு மாசம் இருக்காது?" என்றார் அண்ணார்.

“ஆறு மாசம், எட்டு நாள்” என்றார் பூசாரி.

“அப்பிடியே ஒரு குளந்தய மாதிரில்ல பாத்துக்கிறாரு” என்று அண்ணார் சிரித்தார்.

பூசாரி வண்டியை சற்றுத் தொலைவிலிருந்த வேப்ப மர நிழலில் நிறுத்திவிட்டு வந்தார். பிறகு எல்லோரும் வீட்டுக்குள் சென்றார்கள்.

கூடத்தில் இருந்த சுவரில் அண்ணாரின் தாயின் படம் மாட்டப்பட்டு, நெற்றியில் மஞ்சள் குங்குமம் இட்டு, மாலை அணிவிக்கப்பட்டு இருந்தது. படத்துக்கு முன்னால் இருந்த குத்து விளக்கில் சுடர் பளீரிட்டது. அண்ணார் படத்துக்கு எதிராக அமர்ந்துகொள்ள, பூசாரி அவரது வலப்புறத்தில் உட்கார்ந்துகொண்டார். ஏழெட்டு செங்கல்களை அடுக்கி அதனுள்ளே தீயை ஏற்றினார் பூசாரி. அவரது கைப்பையில் இருந்த தர்ப்பைகளை வைத்து அண்ணாரின் தாயையும், முன்னோர்களையும் மானசீகமாக வரவழைத்து அவர்களின் மேல் பிண்டம் வைத்து உணவளித்தார். பிறகு அதை அண்ணார் கையில் கொடுத்து வெளியே இருந்த பசு மாடுகளுக்குப் போட்டுவிட்டு வருமாறு சொன்னார்.

அண்ணார் பூசாரி சொன்னபடி செய்துவிட்டு வந்தார். அதன் பிறகு அவரும் அண்ணியும், தாய்க்கும் கடவுளருக்கும் தரையில் விழுந்து கும்பிட்டார்கள். பிறகு, பூசாரியையும் வணங்கினார்கள். சின்னுவும் அதே மாதிரி செய்து முடித்தான். சண்முகமும் அமுதாவும் பூசாரியை வணங்கினார்கள்.

பூசாரி, “என்னடா சம்முவம், கல்யாணங் கட்டி ரெண்டு வருசமாவப் போகுது. சும்மா வெறுங்கைய வீசிக்கிட்டு நின்னா எப்பிடி? இந்த ஊர்ல நா கட்டிவச்ச பயலுக, பொம்பளைப் பிள்ளைங்க எல்லாம் பத்து மாசத்துல கொண்டு வந்து போட்டுர்றங்க. வெறுந்தரையா, மொட்ட மரமா இருந்தா ஊருல தலநிமிந்து நடக்க முடியுமா? உங்க அப்பாரு பேரக் காப்பாத்தணுமில்ல. வெரசா வேலயப் பாரு. இல்லாட்டி ஊர்ப் பயலுக எல்லாம் ஏதாச்சும் பேச ஆரமிச்சிருவாங்க” என்றார்.

சண்முகமும் அவன் மனைவியும் அதிர்ச்சியுடன் குன்றி நிற்பதை சின்னு பார்த்தான். அவனுக்குள் ரத்த ஓட்டம் குபீரென்று பொங்குவது போல இருந்தது. அவன், அண்ணாரைப் பார்த்தான். அவர் மெதுவாக எழுந்து வெற்றிலை, பாக்கு, பூ, பழம், பணம் எல்லாவற்றையும் வைத்திருந்த பூசைத் தட்டை எடுத்து பூசாரியிடம் கொடுத்தார்.

பூசாரி வெளியே சென்ற பின் சின்னு பொறுக்க முடியாமல், “என்னா பேச்சு பேசிட்டு போறாரு அந்த மனுசன்? ஏண்ணே அவர சும்மா விட்டீங்க?” என்று கேட்டான்.

“என்ன பண்ணனுங்கிறே?” என்று அண்ணார் கேட்டார்.

“அட்லீஸ்டு நாக்க புடிங்கிக்கிற மாதிரி நீங்க நாலு வார்த்தைய கேட்டிருக்கலாமில்ல? நீங்க தல இருக்கப்ப நா வாலெல்லாம் ஆடக்கூடாதுன்னுதான் அப்பிடியே உடம்பு கொதிய அமுக்கிகிட்டு நின்னேன்” என்றான் சின்னு.

“அவன மாதிரி நாற வாய வச்சிக்கிட்டு நானும் அலையலையேன்னு கேக்குறியா?”

“புரியலையே. அசிங்கமா பேசினவர சும்மா விட்டுறலாம்னு...?”

அண்ணார் அவனை இடைமறித்து, “அப்படீன்னு யார் சொன்னா?” என்று கேட்டார்.

சின்னு அவரை ஆச்சரியத்துடன் பார்த்தான்.

**கா**லையில் தெருவில் கேட்ட இரைச்சல் எல்லோரையும் எழுப்பிவிட்டது. சின்னுவும் மற்றவர்களும் வாசலில் வந்து நின்று பார்த்தார்கள். ஜனங்கள் வேகமாக தெரு முனையை நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள். எதிர்ப்புறத்தில் திரும்பி வந்து கொண்டிருந்த ஒருவரை நிறுத்தி சின்னு என்ன விஷயம் என்று கேட்டான்.

“நீங்களே போயி பாருங்க அந்த வயித்தெரிச்சல. நான் ஸ்டேசன்ல வண்டியப் பிடிக்கணும்“ என்று சஸ்பென்ஸ் கொடுத்துவிட்டு அந்த ஆள் ஓடினார். சின்னுவும் சண்முகமும் அண்ணாரும் போய்ப் பார்த்துவிட்டு வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

தெருமுனையில் ரோடு போடுகிறவர்கள் வெட்டிப் போட்டிருந்த பெரிய பள்ளத்தில் பூசாரியின் பைக் அலங்கோலமாகக் கிடந்தது. சீட் முழுவதும் கிழிக்கப்பட்டு, முன்புறமும் பின்புறமும் இருந்த விளக்குகள் நொறுக்கப்பட்டு இன்ஜின் பாகம் நெளிந்து கிடந்தது. இரண்டு டயர்களும் தனியே நசுங்கின வண்டிக்கு அருகே கிடந்தன. வண்டிக்கு அருகே இருந்த பெரிய பாறாங் கல்லில் பெட்ரோல் தேங்கிக் கிடந்தது.

“அடக் கஸ்ட காலமே!” என்று சண்முகம் வாய் விட்டு அரற்றிவிட்டான்.

“நேத்தி பாத்தப்ப எப்பிடி சொலிச் சிகிட்டு இருந்திச்சு?” என்றபடி சின்னு சரிவில் இறங்கி பள்ளத்துக்குள் நின்ற மனிதர்களுடன் சேர்ந்துகொண்டான்.

யாரோ ஒருவர், “எம்மாம் பெரிய கல்லு பாரு? ரெண்டு மூணு பேராவது சேந்தாத்தான் நகத்தவே முடியும், இல்லே?” என்றார்.

“ஆமா. பூசாரி வீட்டு வாசல்லேந்து இங்க கொண்டு வந்து நசுக்கிப் போடணுமின்னா ஒத்தை ஆளால முடியற காரியம் இல்லே” என்றார் இன்னொருவர்.

சின்னு மேலே ஏறி சண்முகத்தின் அருகில் வந்தான். “அண்ணாரு எங்கே?” என்று கேட்டு சுற்றுமுற்றும் பார்த்தான்.

“போறாரு பாரு அங்கே” என்றான் சண்முகம்.

அந்தப் பெரிய உருவம் வீட்டிற்குத் திரும்பிப் போய்க் கொண்டிருந்ததை சின்னு பார்த்தான். ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# ரொறொன்ரோ தமிழ் இருக்கை

அ. முத்துலிங்கம்

தமிழ் இருக்கைக்கு அமெரிக்க பல்கலைக்கழகம் ஒன்றில் எப்படியான வரவேற்பு கிடைத்தது என்பதை நேரில் பார்க்கும் வாய்ப்பு இரண்டு வருடங்களுக்கு முன்னர் எனக்கு கிடைத்தது. அமெரிக்காவின் பிரபல மருத்துவர் ஒருவர் ஹார்வர்ட் பல்கலைக்கழகத்துக்கு, தமிழ் இருக்கை ஆரம்பிப்பதற்காக கணிசமான தொகையை முன் பணமாக வழங்கியிருந்தார். ஆறுமாதம் கழித்து மீதிப் பணத்தை செலுத்துவதற்காக இரண்டு மருத்துவர்கள் சென்றபோது அவர்களுடன் நானும்கூட இருந்தேன். எங்களைக் கண்டதும் அதிகாரி இழுப்பறையை திறந்து ஆறு மாதம் முன்னர் முன்பணமாகக் கொடுத்த காசோலையை வெளியே எடுத்தார். அந்தப் பணத்தை அவர் வங்கியில் சேர்க்கவே இல்லை.

தமிழ் ஓர் ஆதி மொழி, 2000 வருட இலக்கியங்கள் கொண்ட செம்மொழி என்பது பலருக்கு தெரியாது. அதிகாரியும் அறியவில்லை என்றே நினைக்கிறேன். முதன்முறையாக ஓர் இன மக்கள் சேர்ந்து உருவாக்கப் போகும் இருக்கையில் அவருக்கு பெரிய நம்பிக்கை இருந்திருக்கமுடியாது.'இதுஎங்கேநிறைவேறப் போகிறது?' என அவர் நினைத்திருக்கலாம். ஆகவே அசட்டையாக பணத்தை வங்கியில் கட்டவில்லை. ஆனால், அந்த அதிகாரி தமிழர்களின் வைராக்கியத்தையும் விடாப்பிடிக் குணத்தையும் கணக்கில் எடுக்கவில்லை. விதித்த காலக்கெடு முடிவதற்கிடையில் ஆறு மில்லியன் டொலர்கள் திரட்டியதை கண்ணுற்ற ஹார்வர்ட் அதிகாரிகளின் ஆச்சரியத்துக்கு அளவேயில்லை. தமிழின் தொன்மையும் அதன் வீச்சும், உலகம் முழுக்க வியாபித்திருந்த தமிழர்களின் பற்றும் நிதி இலக்கை இலகுவாக அடைய உதவியது.



ஆனால், ரொறொன்ரோ பல்கலைக் கழகத்துடனான அனுபவம் வேறுமாதிரி அமைந்தது. ஹார்வர்டின் வெற்றியை கண்ணுற்ற ரொறொன்ரோ பல்கலைக்கழக இயக்குநர்கள் அவர்களாகவே தமிழ் மக்களை அணுகி, தமிழ் இருக்கை ஆரம்பிப்பதற்கான சம்மதத்தை வழங்கினார்கள். எதைத் தேடிப் போகவேண்டுமோ அது எங்களை தேடி வந்தது. மூன்று மில்லியன் டொலர்களை (ரூ. 15.6 கோடி) இருப்பு நிதியாக வைத்து உருவாக்கப்படும் இந்தத் தமிழ் இருக்கை தமிழ் மக்களுக்குச் சொந்தமாக இருக்கும். தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்களைக் கற்றுத் தருவதுடன் பல்வேறு முக்கியமான ஆய்வுகளை முன்னெடுக்கும் மையப்புள்ளியாகவும் அமையும். ஏனைய செம்மொழிகள் அனைத்துலக கல்வி நிறுவனங்களில் நிறுவப்பட்டு ஆராய்ச்சி மற்றும் கற்பித்தல் மூலம் பல நன்மைகள் பெற்றுள்ளன. கனடாவில் நிறுவப்படும் தமிழ் இருக்கை தமிழுக்கான அங்கீகாரத்தை அளிப்பதோடு, தொடர் பயன்பாட்டிற்கும் முன்னேற்றத்துக்கும் வலுச்சேர்த்து பல கல்வி நிறுவனங்களுக்கு எடுத்துக்காட்டாகத் திகழும்.

ரொறொன்ரோ நகரில் தமிழ் இருக்கை ஒன்று அமையவேண்டும் என்பது தமிழ் மக்களின் நீண்டநாள் விருப்பம். அதற்கான ஒப்பந்தம் 2018ஆம் வருடம் யூன் மாதம் கையொப்பமாகியது. அதன் தொடக்க விழாவில், ரொறொன்ரோ பல்கலைக்கழக ஸ்காபரோ வளாகத்தின் முன்னாள் தலைவர், 'தமிழ் இருக்கையானது உயர் கல்வி நிறுவனத்தில் தமிழ் கற்பித்தல் மற்றும் ஆராய்ச்சிக்காக மக்களின் ஆதரவுடன் நிறுவப்பட்டு என்றென்றும் நிலைத்திருக்கப்போகும் ஒரு கல்வி அலகாகும். ஒரு மொழி பேசும் குழுவினரால் ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தில் அமைக்கப்படும் முதல் இருக்கை என்பது பெருமைப்பட வேண்டிய ஒன்று. இது வேறு இருக்கைகளுக்கு முன்மாதிரியாக அமையும். தமிழ் மொழியின் பாரம்பரியத்துக்கும், தொன்மைக்கும் அதன் மேன்மைக்கும் சாட்சியாக என்றென்றும் நிலைத்து நிற்கும்' எனக்கூறி வாழ்த்தினார்.

ரொறன்ரோ பல்கலைக்கழகம் 190 ஆண்டுகள் பழமை வாய்ந்த, கனடாவின் முதற்தரமான கல்வி நிறுவனமாகும். கனடாவின் மூன்று ஆளுநர்கள், நான்கு பிரதமர்கள், 14 உச்ச நீதிமன்ற நீதிபதிகள், பத்து நோபல் பரிசு, மூன்று ரூறிங் பரிசு மற்றும் 94 ரோட் பரிசு வென்றோரை ரொறன்ரோ பல்கலைக்கழகம் உருவாக்கியிருக்கிறது. இங்கே நிறுவப்படும் தமிழ் இருக்கை, இந்தியத் துணைக்கண்டத்தைத் தாண்டிய தமிழ்க் கல்வி மற்றும் ஆராய்ச்சிக்கு முதன்மையான இடமாக அமையும். அருகிவரும் தமிழ் இலக்கிய நூல்கள் மற்றும் ஆவணங்கள் எண்மியமாக்கப்பட்டு பாதுகாக்கப்படும். கனடிய அரசு வழங்கும் நல்கைகளை தமிழ் வளர்ச்சிக்கும், ஆராய்ச்சிக்கும், தமிழ் கருத்தரங்குகளை ஒழுங்குசெய்வதற்கும், வருகைப் பேராசிரியர்களை ஏற்பாடுசெய்வதற்கும் பயன்படுத்தலாம். சிறந்த ஆய்வு மாணவர்களுக்கு உதவித்தொகை வழங்கி ஊக்குவிக்கலாம். தமிழ் இருக்கை என்பது நுழைவாயில்தான். தக்க பேராசிரியர் அமைந்தால் முதல்தரமான பல்கலைக்கழகத்தில் ஒரு மொழிக்கு கிடைக்கக்கூடிய அத்தனை



வாய்ப்புகளையும் பயன்களையும் முழுமையாக அடையலாம்.

கனடா, தமிழர்களை அரவணைக்கும் நாடு. 2017ஆம் ஆண்டு தொடங்கி கனடாவில் ஒவ்வொரு சனவரி மாதமும் தமிழ் மரபுத் தினம் கொண்டாடப்படுகிறது. கனடாவில் மூன்று லட்சத்துக்கும் அதிகமான தமிழர்கள் வாழ்கிறார்கள். ரொறொன்ரோ பல்கலையில் பயின்ற பழைய மாணவர்களின் எண்ணிக்கையும் கணிசமாக உள்ளது. நிதி திரட்டுவதில் இவர்கள் மனதை ஒருமுகமாகச் செலுத்தினால் தமிழ் இருக்கை கனவு இலகுவாக நிறைவேறிவிடும். கனடாவின் பல்வேறு மாகாணங்களிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் நன்கொடைகள் கிடைக்கின்றன. வெளிநாட்டுக்கு பணம் அனுப்புவதில் இருக்கும் எண்ணற்ற தடைகளைத் தாண்டி இந்தியாவிலிருந்து பலர் நிதி வழங்கினர்.

கனடாவில் அகதியாக வந்து இன்று அதிசெல்வந்தராக வாழும் தமிழர் ஒருவர் கேட்டார், 'இதில எனக்கு என்ன பிரயோசனம்?'

'உங்களுக்கு ஒன்றும் இல்லை, ஐயா. நாங்கள் விதைதான் விதைக்கிறோம். பயன் உங்கள் சந்ததியினருக்குத்தான்' என்று சொல்லவேண்டி நேர்ந்தது.

தமிழ் மொழி உலக மொழியாகிவிட்டது. நியூசிலாந்தில் இருந்து அலாஸ்கா வரை தமிழ் மக்கள் வாழ்கிறார்கள். உலகத்து மொழிகள் எல்லாம் ஏதாவதொரு மதத்தை சார்ந்தே இருக்கும். ஆனால், தமிழ் மொழி அப்படியில்லை. அது மதங்களைக் கடந்தது. 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்று 2000 வருடங்களுக்கு முன்னரே ஒரு புலவர் பாடிவைத்த மகத்தான மொழிக்கு இருக்கை அமைக்கும் வாய்ப்பு எமக்கு கிடைத்திருப்பது பெரும் அதிர்ஷ்டமே.

ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தில் முதன்முறையாக 21 சனவரி 2019 மாலை தமிழ் மரபுத் தினம் கொண்டாடப்பட்டது. உலகிலேயே ஒரு பல்கலைக்கழகம் தமிழ் மரபுத் தினத்துக்கு விழா எடுத்தது இதுவே முதல் என்று சொல்லலாம். இந்தக் கொண்டாட்டத்தில் பிரபல இசையமைப்பாளர் இமான் பிரதம விருந்தினராக கலந்துகொண்டு அவர் இசையமைத்த ரொறொன்ரோ தமிழ் இருக்கை வாழ்த்துப் பாடலை வெளியிட்டார். இமானை வரவேற்று பேசிய ரொறொன்ரோ பல்கலைக்கழகத் தலைவர் விஸ்டம் டெட்டி 'கனடாவில் உருவாகும் தமிழ் இருக்கை புதிய ஆராய்ச்சிகளுக்கு வழிவகுப்பதுடன் தமிழின் மேன்மையை அனைத்துலக மக்களுக்கும் கொண்டு செல்லும்' என்று கூறி இமானைப் பாராட்டினார். இசையமைத்த செலவு, பயணச் செலவு அனைத்தையும் இமானே ஏற்றுக்கொண்டார். அவருடைய அர்ப்பணிப்பும் தமிழ் பற்றும், தமிழ் இருக்கை அமையவேண்டும் என்ற ஆர்வமும் தமிழ் மக்களால் என்றும் மறக்கமுடியாத ஒன்று.

கனடாவில் சிறு குழந்தைகளும் மாணவ மாணவியரும் தங்களுக்கு கிடைத்த பிறந்தாள் பணத்தை தமிழ் இருக்கைக்கு கொடுத்தார்கள். 2700 கி.மீட்டர் தொலைவில் அல்பெர்ட்டா மாகாணத்திலிருந்து ஒரு சிறுமி அவருடைய பிறந்த நாளுக்கு கிடைத்த பணத்தை அப்படியே தமிழ் இருக்கைக்கு அனுப்பியிருந்தார். சிறுமிக்கு நன்றிகூறிவிட்டு அவருடைய அப்பாவிடம் பேசியபோது அவர் சொன்னார், 'ஒரு சினிமா 2 வாரம் ஓடியதற்காக பெரிய விழா எடுக்கிறார்கள். தமிழ் 2500 வருடங்களாக ஓடுகிறது. அதையல்லவா நாங்கள் கொண்டாடவேண்டும்.' எழுத்தாளர் இமையம் அந்தச் சமயம் தமிழ் இலக்கியத் தோட்டத்தின் இயல் விருது பெற கனடா வந்திருந்தார். அவர் தனது விருதுப் பணத்தில் ஒரு பகுதியை மேடையிலே தமிழ் இருக்கைக்கு வழங்கிவிட்டு ஏற்புரையில் இப்படி



ரொறொன்ரோ பல்கலைக்கழகம்

சொன்னார். 'குழந்தைகளும் மாணவ மாணவியரும் தமிழ் இருக்கைக்கு பணம் கொடுப்பதை பார்ப்பது நெகிழ்ச்சியாகவிருக்கிறது. என் பங்குக்கு ஒரு சிறுபகுதியை வழங்குகிறேன். எத்தனை டொலர்கள் சேர்க்கப்பட்டன என்பது அல்ல முக்கியம். எத்தனை பேர் பங்குபற்றினார்கள் என்பதே முக்கியம்.'

தமிழர் ஒருவர் கனடா நாட்டில் நாடாளுமன்ற உறுப்பினராக இருப்பதும், இரு தமிழர்கள் மாகாண அரசு உறுப்பினர்களாக இருப்பதும் எங்களுக்கு பெருமை தருவது. நாங்கள் நடத்தும் தமிழ் மரபு கொண்டாட்டங்களை வேற்று மொழிக்காரர்கள் பிரம்மிப்புடன் பார்க்கிறார்கள். கனடாவின் தேசிய கீதம் ஆங்கிலத்திலும் பிரெஞ்சிலும் மட்டுமல்லாமல் தமிழிலும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, எந்த தமிழ் விழா என்றாலும் தமிழில் கனடா தேசிய கீதத்தை பாடியே தொடங்குகிறோம். எங்கள் மொழிக்கு நாடு இல்லாதபடியால் தேசிய கீதம் கிடையாது, ஆனால், தமிழ் மொழி வாழ்த்து பாடித்தான் விழாக்களை ஆரம்பிக்கிறோம். உலகத்திலேயே, ஒரு மொழிக்கான வணக்கப் பாடலைப் பாடி நிகழ்ச்சியை தொடங்குவது தமிழர்கள் மட்டும்தான்.

கடந்த ஜூலை மாதம் ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தில் தமிழ் இருக்கை முதலாம் ஆண்டு நிறைவு விழா கொண்டாடப்பட்டது. ஒரு மில்லியன் டொலர்கள் திரட்டியாகிவிட்டதை பல்கலைக்கழகம் உத்தியோக பூர்வமாக அறிவித்தது. மீதி இரண்டு மில்லியன் டொலர்களை ஒருவருட காலக் கெடுவுக்குள் திரட்டவேண்டும். நன்கொடை விவரங்கள் அனைத்தும் பல்கலைக்கழகத்தில் நிரந்தரமாக பொறிக்கப்படும். torontotamilchair.ca என்ற இணையத்தளத்தில் DONATE என்ற பொத்தானை அழுத்துவதன் மூலம் நன்கொடைகளை வழங்கலாம்.

தானாக வரும் நன்கொடைகள் ஒருபக்கம் இருந்தாலும், நன்கொடையாளர்களைத் தேடி பல்கலைக்கழகம் போவதும் உண்டு. ஒருநாள் தமிழ் இருக்கைக்கான telemarketing நடந்தது. 25 பல்கலைக்கழக மாணவ மாணவிகள் தொலைபேசி முன் அமர்ந்து பல்கலைக்கழகத்தில் ஏற்கனவே படித்தவர்களை அழைத்து தமிழ் இருக்கைக்கு நன்கொடை கேட்டனர். எல்லோருமே வேறு வேறு மொழி பேசும் தன்னார்வத் தொண்டர்கள். கூகிளில் தமிழ் பற்றி படித்ததுதான் அவர்கள் அறிவு. தமிழ் இருக்கை பற்றி அவர்களுக்கு அறிமுகம் செய்வதற்கு நான் அங்கு சென்றிருந்தேன். 'ஒரு மாணவியிடம் ஏன் இந்த வேலையை செய்கிறார்?' என்று கேட்டேன். அவர் சொன்னார், '2500 வருடங்களாக வாழும் ஒரு மொழிக்கு இருக்கை அமைந்தால் அது பல்கலைக்கழகத்துக்கு பெருமையல்லவா?' அந்த நொடியில் என் கண்களை அவர் திறந்துவிட்டார். அதுவரைக்கும் நான் தமிழ் இருக்கை அமைவதால் தமிழுக்குத்தான் பெருமை என நினைத்திருந்தேன்.

'எதற்காக தமிழ் இருக்கை மிகவும் முக்கியம் என்று கருதுகிறீர்கள்?' என்று பலர் என்னிடம் கேட்டிருக்கின்றனர். முதல் காரணம் தமிழ் மொழியின் தொன்மை, அத்துடன் அது இன்னும் வாழ்கிறது என்ற பெருமை. 'ஏற்றுக உலையே, ஆக்குக சோறே, கள்ளும் குறைபட ஓம்புக.' இந்த வரிகள் 2500 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டவை. இன்றும், ஆறாம் வகுப்பு சிறுமியால் இதைப் படித்து புரிந்துகொள்ள முடியும். அதுதான் தமிழின் பெருமை. ஏனைய செம்மொழிகளுக்கு பல்கலைக்கழகங்களில் இடம் உண்டு. ஆனால், தமிழ் மொழியை ஒருவரும் கவனிப்பதில்லை. இது பெரிய அநீதியாகப் படுகிறது. இதைச் சரிசெய்வதும் ஒரு நோக்கம். மற்றைய மொழிகளுக்கு நாடு இருக்கிறது. தமிழுக்கு சொந்தமாக ஒரு நாடும் இல்லை. ஆகவே, எங்கள் மொழிக்காக ஒரு நாடும் போராடப் போவதில்லை. நாங்கள்தான்




போராடவேண்டும்.

மறைமுகமான பலன்கள் பலவற்றை நாம் எதிர்பார்க்கலாம். ஆராய்ச்சிக்காக ஒரு மாணவருக்கு கனடிய அரசு நல்கை வழங்குகிறது என்று வைத்துக்கொள்வோம். இந்த நல்கையில் கிடைக்கும் நிதியை மாணவர் தன் ஆராய்ச்சிக்காக வெளிநாடுகளில் பயன்படுத்தலாம். உதாரணமாக கீழடியில் பணப்பற்றாக்குறையினால் சில ஆராய்ச்சிகள் தள்ளிப்போடப் படலாம். மாணவருக்கு அந்த தடையே கிடையாது. அதுபோல இலங்கையில் கிடைக்கும் அரிய பழைய தமிழ் நூல்களையும் சுவடிகளையும் எண்மியமாக மாற்றுவதற்கும் இப்படியான நிதி பெரியளவில் உதவும்.

ரொறொன்ரோவில் தமிழ் இருக்கை ஒன்றை உண்டாக்குவதன் மூலம் தமிழை உலகமயமாக்கும் வாய்ப்பு எங்களைத் தேடி வந்திருக்கிறது. கனடாவில், புலம்பெயர்ந்து வாழும் தமிழர்களின் இரண்டாவது தலைமுறை இப்போது தலையெடுத்திருக்கிறது. முற்றிலும் கனடியச் சூழலில் வாழும் மூன்றாவது தலைமுறை தமிழை மறந்துவிடும். மிக முக்கியமான ஒரு சந்தியில் நாம் நிற்கிறோம். இந்தத் தலைமுறை தாண்டினால் தமிழ் இருக்கை என்பது கனவாகிவிடும். இதுதான் தருணம். இப்பொழுதே செய்தாகவேண்டும்.

உலகத் தரவரிசையில் தமிழின் பலம் என்ன என்பதை பலர் உணரவில்லை. நிரந்தரமான, வலுவான ஓர் இடம் இந்த இருக்கையால் எமக்கு அமையும். சமீபத்தில் வாசிங்டன் நகரில் நடந்த விழா ஒன்றுக்குச் சென்றிருந்தேன். அங்கே ஆன் ஃபிரீட்மன் என்ற பெண்மணியை சந்தித்தேன். பெரிய செல்வந்தர். மூன்று புலிட்சர் பரிசுகளை வென்ற பிரபலமான எழுத்தாளர் தோமஸ் ஃபிரீட்மனுடைய மனைவி. இவர் Planet Word (சொல் கோளம்) என்ற அமைப்பை உருவாக்கியிருக்கிறார். இதற்கான பட்ஜெட் 25 மில்லியன் டொலர்கள். உலகத்தின் முக்கியமான 20 மொழிகள் இங்கே அருங்காட்சியகமாகப் பாதுகாக்கப்படும். ஆவலுடன் 'பட்டியலில் தமிழ் இருக்கிறதா?' என்று கேட்டேன். ஏனெனில், உலகில் அதிகமாகப் பேசப்படும் மொழிகளின் பட்டியலில் தமிழ் 19ஆவது இடத்தில் வருகிறது. அவர் சற்று யோசித்துவிட்டு 'தமிழ் மொழிக்கு சொந்தமான நாடு எது?' என்றார். என்னிடம் பதில் இல்லை. நான் 'தமிழ் மொழிக்கு உலகமே சொந்தம்' என்றேன். மீண்டும் 'ஐஸ்லாண்டிக் மொழிக்கு இடம் உள்ளதா?' என்று கேட்டேன். அவர் ஆம் என்றார். நான் 'ஒரு மில்லியனுக்கும் குறைவான, மூன்று லட்சம் மக்கள் மட்டுமே பேசும், ஐஸ்லாண்டிக் மொழி பட்டியலில் உள்ளது. ஆனால், 80 மில்லியன் மக்கள் பேசும் ஆதி மொழியும் செம்மொழியுமான தமிழ் மொழிக்கு இடமில்லையா?' என்றேன். ஐஸ்லாண்ட் நாடு கணிசமான நிதி தருவதாக அவர் சொன்னார். அதற்கு என்ன பதில் சொல்வது?

தமிழ் மொழி உலகத்தில் மற்றவர்களால் எப்படி பார்க்கப்படுகிறது என்பதற்கான உதாரணம்தான் இது. தமிழ் மொழிக்கு அங்கீகாரம் கிடைத்தால் எங்கள் பிரச்சினைகள் எல்லாம் தீர்ந்துவிடும் என்பதல்ல. தமிழ் இருக்கை மூலம் எங்களுக்கு மேசையிலே ஓர் இடம் கிடைத்திருக்கிறது. சரிசமமான இடம். உலக அரங்கில் எங்கள் குரலை எழுப்ப எங்களுக்கு கிடைத்த மிகப்பெரிய ஆயுதம். இதை நாங்கள் பயன்படுத்தவில்லை என்றால் அது மிகப் பிரம்மாண்டமான தவறாக இருக்கும்.

ரொறொன்ரோவில் அரியாசனம், தமிழுக்கு சரியாசனம். ●

**அ. முத்துலிங்கம் <amuttu@gmail.com>**

# பூமா ஈஸ்வரமூர்த்தி கவிதைகள்

1

பழைய பாதைகளில்
தினம் தினம் வலம் செல்லும்
வலதுபுற நண்பன்
பழைய பாதைகளில்
புதிய பாதைகளை தேடுகிறேன் என்கிறான்
புதிய புதிய பாதைகளை
தினம் தினம் தேர்ந்தெடுக்கும்
இடதுபுற நண்பன்
புதிய பாதைகளில்
பழைய பாதைகளை தேடுகிறேன் என்கிறான்
சட்டைக்கு இரண்டு பைகள்
வலது பையிலிருந்தும் பறவைகள்
ஒன்றன்பின் ஒன்றாக வெளிவந்து
வான் மிதக்கும்
இடது பையிலிருந்தும் பறவைகள்
ஒன்றன்பின் ஒன்றாக வெளிவந்து
வான் மிதக்கும்



2

தாக உணர்வில் நடு இரவின்
ஏதோ ஒரு பொழுதில்
இப்போது விழித்துக் கொள்கிறேன்
தாகம் தீர நீரருந்திய பொழுதில்
ஞாபகத்தில் பொருத்திக் கொள்கிறேன்
தினம் தினம் பறவைகள் அருந்த
வீட்டின் சன்னல் விளிம்பில்
இன்றிலிருந்து பாத்திரத்தில் நீர்

3

நேற்று பார்த்த மரமில்லை நான்
புதிதாக சில தளிர்களும்
சில உதிர்தல்களும் உண்டு
நேற்று உணர்ந்த நிழலில்லைதான்
புதிதாக சில தளிர்களும்
சில உதிர்தல்களும் உண்டு ●

**பூமா ஈஸ்வரமூர்த்தி <seathu1952@gmail.com>**

# அட்சரா வெளியீடுகள்

ரூ. 290/-

**கோதையின் காதல்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 395/-

**திருக்கோளூர் ரகசியங்கள்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 80/-

**சொர்ண பைரவர்**

ஸ்ரீ வேம்பு சித்தர்

ரூ. 200/-

**திவ்ய பிரபந்தம்**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 90/-

**சுப்ரமண்ய ஸ்தோத்திரங்கள்**

நா.அங்கமுத்து முதலியார்

ரூ. 250/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 220/-

**ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ர நாமம் 1**

வித்யா பூஷண, வைஷ்ணவ சிம்ஹம்
ஸ்ரீ.வ.ந.கோபால தேசிகாசாரியார்
M.A., M.Sc. (London), I.R.T.S. (Retd.)

ரூ. 130/-

**அபிராமி அந்தாதி**


## அட்சரா பதிப்பகம்

12 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 2ஆவது குறுக்குத் தெரு, சிஐடி நகர் , 3ஆவது பிரதான சாலை
நந்தனம், சென்னை - 600035. தொலைபேசி: 94440 7000,